விற்பனையில் மாபெரும் சாதனைகளைப் படைத்திருக்கும்
**'என் சீஸை நகர்த்தியது யார்?'** நூலின் **தொடர்ச்சி**

**தேக்க நிலையிலிருந்து விடுபடுவதற்கான அற்புதமான ஒரு வழி**

# புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்



**ஸ்பென்சர் ஜான்சன், எம்.டி.**

*Tamil translation of* **OUT OF THE MAZE** by Spencer Johnson, **M.D.**

**தமிழில்: நாகலட்சுமி சண்முகம்**






# புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்

## தேக்க நிலையிலிருந்து விடுபடுவதற்கான அற்புதமான ஒரு வழி

**ஸ்பென்சர் ஜான்சன், எம்.டி.**

**தமிழில்: நாகலட்சுமி சண்முகம்**




**மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்**

*First published in India by*




**Manjul Publishing House**

*Corporate and Editorial Office*

2 Floor, Usha Preet Complex, 42 Malviya Nagar, Bhopal 462 003 - India

*Sales and Marketing Office*

7/32, Ansari Road, Daryaganj, New Delhi 110 002 - India Website: www.manjulindia.com

*Distribution Centres*

Ahmedabad, Bengaluru, Bhopal, Kolkata, Chennai, Hyderabad, Mumbai, New Delhi, Pune

Tamil translation of

*Out of the Maze* by *Spencer Johnson, M.D.*



This edition published by arrangement with Portfolio, an imprint of Penguin Publishing Group, a division of Penguing Random House LLC

This edition first published in 2019

ISBN 978-93-88241-82-3

Translation by Nagalakshmi Shanmugam

Edited by PSV Kumarasamy

# உள்ளடக்கம்

“ என்னால் அதை நம்ப முடியவில்லை!” என்று ஆலிஸ் கூறினாள்.

அதைக் கேட்ட அரசியார் அவள்மீது பரிதாபம் கொண்டு, “ உன்னால் முடியாதா? மீண்டும் முயற்சி செய்து பார். முதலில் ஆழமாக சுவாசித்துவிட்டு, பிறகு உன் கண்களை மூடிக் கொள்,” என்று கூறினார்.

ஆலிஸ் இதைக் கேட்டுச் சிரித்துவிட்டு, “ முயற்சி செய்வதில் எந்தப் பலனும் இல்லை. சாத்தியமற்ற விஷயங்களை யாராலும் நம்ப முடியாது,” என்று பதிலளித்தாள்.

“ இதில் நீ போதிய பயிற்சி பெற்றிருக்கவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. நான் உன் வயதில் இருந்தபோது, தினமும் அரை மணிநேரம் அதை நான் பயிற்சி செய்தேன். சில சமயங்களில், காலை உணவு உட்கொள்ளுவதற்கு முன்பாகவே, சாத்தியமற்ற ஆறு விஷயங்களையாவது நான் நம்பியிருப்பேன்,” என்று அந்த அரசியார் கூறினார்.

**- லூயிஸ் கேரல்**

***

“ அறிவைவிடக் கற்பனை அதிக முக்கியமானது. அறிவுக்கு எல்லை உண்டு. ஆனால், கற்பனை இந்த ஒட்டுமொத்த உலகத்தையும் ஆட்கொண்டுள்ளது.”

**- ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்**

***

# இக்கதை பிறந்த கதை

தன் வாழ்வில் மிகக் கடினமான ஒரு காலகட்டத்தைக் கையாளத் தனக்குத் தானே உதவிக் கொள்ளும் நோக்கத்துடன்தான் ‘என் சீஸை நகர்த்தியது யார்?’ நூலின் கதையை டாக்டர் ஸ்பென்சர் ஜான்சன் உருவாக்கினார். அவர் அந்த நீதிக்கதையைப் பல ஆண்டுகளாக மற்றவர்களுடன் பகிர்ந்து, அது அவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும் தொழில்வாழ்க்கையிலும் பெரிதும் உதவியதைப் பார்த்தப் பிறகு, அக்கதையை ஒரு சிறு புத்தகமாக அவர் உருமாற்றினார்.

அப்புத்தகம் வெளியிடப்பட்டு ஆறு மாதங்களுக்குள் சுமார் பத்து லட்சம் பிரதிகள் அச்சிடப்பட்டன. ஐந்து ஆண்டுகளில், அந்நூல் இருபது லட்சத்திற்கும் அதிகமான பிரதிகள் விற்பனையாகியது. 2005 ம் ஆண்டில், மிகச் சிறப்பாக விற்பனையாகும் நூல்களின் வரிசையில் ‘என் சீஸை நகர்த்தியது யார்?’ நூல் தொடர்ந்து முதலிடம் வகித்து வந்ததாக அமேசான் தெரிவித்தது.

காலப்போக்கில், ஸ்பென்சரின் அந்த அற்புதமான படைப்பை சாதாரண மக்களில் தொடங்கி, நிறுவனங்களும், பள்ளிகளும், தேவாலயங்களும், ராணுவமும், விளையாட்டுக் குழுக்களும் பெருமளவில் பயன்படுத்தலாயின. தமிழ் உட்பட உலகின் பல்வேறு அந்நிய மொழிகளிலும் அது மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அக்கதையைப் படித்ததன் மூலமாகத் தங்களுக்குக் கிடைத்த ஞானம் தங்களுடைய தொழில்வாழ்க்கையையும் வியாபாரத்தையும் ஆரோக்கியத்தையும் மணவாழ்க்கையையும் வெகுவாக மேம்படுத்தியுள்ளதாக அதன் வாசகர்களும் ரசிகர்களும் ஒருமனதாகத் தெரிவித்துள்ளனர். அந்நூல் உலகளாவிய வரவேற்பைப் பெற்றுள்ளது.

ஆனாலும், விடையளிக்கப்படாத சில கேள்விகள் இன்னும் இருந்ததாக ஸ்பென்சர் கருதினார்.

அவர் தன்னுடைய குறிப்பேட்டில் இவ்வாறு எழுதியிருந்தார்: “அக்கதையைப் படித்தப் பலர், மாற்றங்கள் நிகழும்போது சில சமயங்களில் அம்மாற்றங்களுக்கு ஏற்ப நம்மை நாம் பொருத்திக் கொண்டு சிறப்பாகச் செயல்படுவதும், மற்ற சமயங்களில் நாம் அவ்வாறு செயல்படாமல் போவதும் ஏன் என்பது குறித்தும், தனிப்பட்ட முறையில் வெற்றியை நாம் எவ்வாறு வரையறுத்து வைத்திருந்தாலும் சரி, மாறிக்

கொண்டிருக்கின்ற ஓர் உலகில், அம்மாற்றங்களுக்கு ஏற்ப அதிக விரைவாகவும் அதிக சுலபமாகவும் நம்மை நாம் பொருத்திக் கொண்டு, அதிக மகிழ்ச்சியாகவும் அதிக வெற்றிகரமாகவும் திகழுவது எப்படி என்பது குறித்தும் அதிகமாகத் தெரிந்து கொள்ள விரும்பினர்."

சீஸ் கதையை அடுத்தக் கட்டத்திற்கு எடுத்துச் செல்லுவதன் மூலம் இக்கேள்விகளுக்கு விடை காண முடியும் என்று ஸ்பென்சர் நம்பினார்.

தங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும் தொழில்வாழ்க்கையிலும் ஏற்படும் மாற்றங்களை சுவீகரித்துக் கொண்டு அவற்றுக்கு ஏற்றபடி தங்களைப் பொருத்திக் கொள்ளுவது எப்படி என்பதை 'என் சீஸை நகர்த்தியது யார்?' என்ற நூல் வாசகர்களுக்குக் காட்டியது.

மாற்றத்திற்கு ஏற்ப உங்களைப் பொருத்திக் கொள்ள உதவுவதோடு, உங்கள் தலைவிதியை மாற்றவும் உங்களுக்கு உதவக்கூடிய வழிமுறைகளையும் உத்திகளையும் 'புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்' என்ற இந்நூல் உங்களுக்கு வழங்குகிறது.

## அணிந்துரை: ஸ்பென்சர் ஜான்சனின் புதல்வர்கள்

### எமர்சன் ஜான்சன் , ஆஸ்டின் ஜான்சன் மற்றும் கிறிஸ்டியன் ஜான்சன்

'புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்' என்ற இந்நூலை நீங்கள் இப்போது படிக்கவிருப்பது குறித்து நாங்கள் மிகுந்த மகிழ்ச்சி கொள்ளுகிறோம்.

மக்களுக்கு உதவுவதற்கான வழிகளைத் தேடுவதில் சிறு வயதிலிருந்தே எங்கள் தந்தைக்குப் பெரும் விருப்பமும் ஆர்வமும் இருந்து வந்தன. அவர் தன்னுடைய பதின்பருவத்தில், தன்னுடைய அக்கம்பக்கத்து வீட்டுக் குழந்தைகள் நீச்சல் பயிற்சியில் ஈடுபடுவதற்காக ஒரு நீச்சல் பள்ளியைத் துவக்கினார். அவர் வாலிபப் பருவத்தை எட்டியபோது, ஓர் அறுவைச் சிகிச்சை வல்லுநராக ஆவதற்குப் பயிற்சி பெற்றார். ஆனால், எழுதுவதில்தான் தனக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது என்பதைப் பின்னர் அவர் கண்டறிந்தார். தன்னுடைய எழுத்துப் படைப்புகள் மூலம் அதிக எண்ணிக்கையிலான மக்களுக்குத் தன்னால் சேவை செய்ய முடியும் என்று அவர் இதயபூர்வமாக உணர்ந்தார்.

அவர் இப்போது எங்களோடு இல்லாதது எங்களுக்கு ஒரு பெரிய குறைதான். இவ்வுலகிற்கு அவர் ஆற்றியுள்ள பங்களிப்புகள் குறித்து நாங்கள் மிகுந்த பெருமிதம் கொள்ளுகிறோம்.

இப்புத்தகத்தில் இடம்பெற்றுள்ள வார்த்தைகளையும் முதுமொழிகளையும் அவர் தன் வாழ்நாள் நெடுகிலும் மகிழ்ச்சியான காலகட்டங்களிலும் மோசமான காலகட்டங்களிலும் சம அளவில் பயன்படுத்தினார். அவருடைய கணையத்தில் புற்றுநோய் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டபோது, அவர் தன்னுடைய நோயை ஒரு புதிய கண்ணோட்டத்தில் பார்ப்பதற்கு அந்த வார்த்தைகளும் முதுமொழிகளும் அவருக்கு உதவின. தான் எதிர்கொண்டிருந்த மாற்றத்தை அவர் அன்போடும் நன்றியோடும் ஏற்றுக் கொள்ளுவதற்குத் தேவையான வழிமுறைகளையும் வலிமையையும் அவை அவருக்குக் கொடுத்தன.

அவருடைய புற்றுநோய் இறுதிக் கட்டத்தை எட்டியபோது அவர் அந்நோய்க்கு எழுதிய ஒரு கடிதத்தை இக்கதையின் முடிவில் நாங்கள் உங்களோடு பகிர்ந்து கொண்டிருக்கிறோம். இக்கதையில் இடம்பெற்றுள்ள ஆழமான உள்நோக்குகளை அவர் தன் சொந்த வாழ்வில் எந்த

அளவுக்குப் பயன்படுத்தினார் என்பதை இக்கடிதம் விளக்கிக் காட்டுவதாக நாங்கள் கருதுகிறோம்.

இப்புத்தகம் உங்களுக்கு சுவாரசியமூட்டுவதாகவும் மகிழ்ச்சியூட்டுவதாகவும் இருக்கும் என்று நாங்கள் நம்புகிறோம். நீங்கள் எல்லா விதத்திலும் மேன்மேலும் சிறப்புற வேண்டும் என்று நாங்கள் வாழ்த்துகிறோம்.

**- ஸ்பென்சர் ஜான்சனின் புதல்வர்கள்**

**ஜூலை 2018**

## சிக்காகோவில் ஒரு பயிலரங்கு

இலையுதிர்காலத்தின்போது ஒருநாள், வாராந்திர வியாபாரக் கருத்தரங்கு ஒன்றில் கலந்து கொள்ளுவதற்காக ஒரு குழுவினர் ஒன்றுகூடினர். அக்கருத்தரங்கின் கடைசிப் பயிற்சி வகுப்பிற்கு முந்தைய வகுப்பு அது. அவ்வகுப்பிற்கு, மாற்றத்திற்கு வெவ்வேறு விதமாகச் செயல்விடை அளித்த ஹெம், ஹா ஆகிய இரண்டு கதாபாத்திரங்களைப் பற்றிய ஒரு சிறிய கதையை அவர்கள் படித்துவிட்டு வர வேண்டும் என்று அவர்களிடம் கூறப்பட்டிருந்தது. அப்புத்தகத்தின் பெயர் 'என் சீஸை நகர்த்தியது யார்?'.

வகுப்பில் எல்லோரும் தத்தம் இடங்களில் அமர்ந்ததும், அக்கருத்தரங்கின் தலைவரான டெனிஸ் தன் பேச்சைத் துவக்கினார்.

" இந்த வகுப்பை நான் ஒரு கேள்வியோடு துவக்க விரும்புகிறேன்: எந்தக் கொம்பன் நம்முடைய சீஸை நகர்த்தினான்? அது குறித்து நாம் என்ன செய்யப் போகிறோம்?"

இதைக் கேட்டவுடன் எல்லோரும் சிரித்தனர். எல்லோரையும் ஆசுவாசமாக உணரச் செய்வதற்கான திறன் டெனிஸுக்கு இருந்தபோதிலும், வேலை என்று வந்தபோது, அவர் சில முக்கியமான உள்நோக்குகளைக் கொண்டிருந்தார் என்பதை அவர்கள் எல்லோரும் அறிந்திருந்தனர்.

எனவே, அவர்கள் அப்புத்தகத்தைப் பற்றி விவாதிக்கத் தொடங்கினர். தங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும் தங்களுடைய தொழில்வாழ்க்கையிலும் தங்களுக்குப் பெரிதும் உதவிய ஏகப்பட்ட விஷயங்களை அப்புத்தகத்திலிருந்து தாங்கள் கற்றுக் கொண்டிருந்ததாக ஒருசிலர் கூறினர்.

ஆனால் வேறு சிலருடைய மனங்களில் சில கேள்விகள் இருந்தன.

தொழில்நுட்பத் துறையில் பணியாற்றிய அலெக்ஸ் என்பவர் இவ்வாறு வினவினார்: "மாற்றத்திற்கு ஏற்ப நம்மைப் பொருத்திக் கொள்ள வேண்டும் என்ற கருத்தைப் பற்றிய எல்லா விஷயங்களும் எனக்குப் புரிகின்றன. ஆனால், அவற்றைச் சொல்லுவது சுலபம், செய்வதுதான் மிகவும் கடினம். நம்மை நாம் எப்படிப் பொருத்திக் கொள்ளுவது?"

அவரோடு உடன்பட்ட மியா என்ற மருத்துவர், “ சில மாற்றங்களைக் கையாளுவது சுலபமானதாக இருக்கிறது. ஆனால், சில மாற்றங்கள் உண்மையிலேயே கடினமாக இருக்கின்றன,” என்று கூறினார்.

“ என் வேலை வெறுமனே மாறியிருக்க மட்டுமில்லை, அது முற்றிலுமாக மறைந்து போய்க் கொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது,” என்று அலெக்ஸ் கூறினார்.

“ என் விஷயத்திலும் அப்படித்தான் தெரிகிறது,” என்று பதிப்புத் துறையைச் சேர்ந்த புரூக் கூறினார். “சில சமயங்களில், என்னுடைய துறையை என்னால் அடையாளம்கூடக் காண முடிவதில்லை.”

“ சில சமயங்களில் என் வாழ்க்கையையே என்னால் அடையாளம் காண முடிவதில்லை,” என்று அலெக்ஸ் கூறினார். இதைக் கேட்டு எல்லோரும் சிரித்தனர். அவர் மேலும், “ நான் உண்மையைத்தான் கூறுகிறேன். ஒரே நேரத்தில் எக்கச்சக்கமான விஷயங்கள் மாறிக் கொண்டிருக்கின்றன. என்னால் முடிந்தால் என்னுடைய ‘சீஸோடு சேர்ந்து நானும் நகர்ந்துவிடுவேன்,’ ஆனால் பாதி நேரம், அந்த சீஸ் எங்கே போயிற்று என்பது பற்றி எனக்கு எந்த யோசனையும் இருப்பதில்லை!” என்று கூறினார்.

இந்த உரையாடல் இப்படித் தொடர்ந்து கொண்டிருந்தபோது, பின்வரிசையில் அமர்ந்திருந்த டிம் என்ற இளைஞர் தன் கையை உயர்த்தி ஏதோ கூறினார்.

அப்போது டெனிஸ் தன்னுடைய இரண்டு கைகளையும் உயர்த்தி, அமைதியாக இருக்கும்படி எல்லோரையும் கேட்டுக் கொண்டார். எல்லோரும் அமைதியானவுடன், “ டிம், நீங்கள் கூறியதை மீண்டும் கூற முடியுமா?” என்று அவர் கேட்டார்.

டிம் லேசாகச் செருமித் தன் தொண்டையைச் சரிசெய்து கொண்டு, “ ஹெம் என்னவானான்?” என்று கேட்டார்.

அலெக்ஸ் அவரைத் திரும்பிப் பார்த்துவிட்டு, “ ஹெம்மைப் பற்றிப் பேச என்ன இருக்கிறது?” என்று கேட்டார்.

“ ஹெம்முக்கு என்ன நிகழ்ந்தது?” என்று டிம் மீண்டும் கேட்டார்.

அந்த அறையில் ஒரு கனத்த மௌனம் நிலவியது. எல்லோரும் ஹெம் மற்றும் ஹாவைப் பற்றி நினைத்துப் பார்த்தனர். பிறகு, மேற்கூறப்பட்டக்

கேள்வியை அவர்கள் அனைவரும் தங்களைத் தாங்களே கேட்டுக் கொண்டனர்.

டிம் தொடர்ந்தார். "அதைத்தான் நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஏனெனில், ஹெம் என்ற கதாபாத்திரத்தோடுதான் என்னை நான் அதிகமாக அடையாளம் காணுகிறேன்.

" ஹா எப்படியோ சமாளித்து ஒரு வழியைக் கண்டுபிடித்துவிடுகிறான். இதற்கிடையே, ஹெம் தன்னுடைய காலியான வீட்டில் உட்கார்ந்து கொண்டு, தனிமையிலும் வருத்தத்திலும் உழன்று கொண்டிருக்கிறான். ஹாவைப்போலவே தானும் இவற்றை எப்படிச் சமாளிப்பது என்பதைக் கண்டுபிடிக்க அவன் விரும்புவதாக எனக்குத் தோன்றுகிறது, ஆனால் வழி தெரியாமல் அவன் உண்மையிலேயே சிக்கிக் கொண்டிருக்கிறான். சொல்ல எனக்குத் தயக்கமாக இருக்கிறது, ஆனால் என் நிலைமையும் இப்போது அப்படித்தான் இருக்கிறது."

முதலில் யாரும் எதுவும் பேசாமல் இருந்தனர். பிறகு மியா பேசினார்.

" நீங்கள் சொல்ல வருவது எனக்குப் புரிகிறது. என்னுடைய சூழ்நிலையும் அப்படித்தான் இருக்கிறது. சீஸ் எங்கே இருக்கிறதோ, அங்கே நான் போக விரும்புகிறேன். ஆனால் எங்கிருந்து துவக்க வேண்டும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை," என்று அவர் கூறினார்.

அந்த இளைஞர் கூறியது தங்கள் விஷயத்திலும் உண்மையாக இருந்ததை ஒவ்வொருவராக உணரத் தொடங்கினர். சீஸ் கதையில், ஹா கதாபாத்திரம் புதிர்ப்பாதைக்கு வெளியே சென்று 'புதிய' சீஸைக் கண்டுபிடித்தது. அக்கதாபாத்திரம் மாற்றத்துடன் இயைந்து சென்றது. எனவே, அந்தப் போக்கு அதற்குச் சாதகமாக அமைந்தது. ஆனால் ஹெம் கதாபாத்திரம் தன் வழியைத் தொலைத்துவிட்டுத் திக்குத் தெரியாமல் தவித்தது.

அக்கருத்தரங்கில் கலந்து கொண்டிருந்தவர்களில் ஏராளமானோர் தங்கள் வாழ்வில் அத்தகைய ஒரு நிலைமையில்தான் இருந்தனர். அதை அவர்கள் உணரவும் செய்தனர்.

டிம்மைப் பற்றியும் அவருடைய கேள்வியைப் பற்றியும் டெனிஸ் அந்த வார இறுதி முழுவதும் சிந்தித்தார்.

மறுவாரம் அந்த வகுப்பு தொடர்ந்தபோது, அவர் அக்குழுவினரிடம் இவ்வாறு கூறினார்: "ஹா ஏன் மாறினான், ஹெம் ஏன் மாறவில்லை

என்பது பற்றியும், அடுத்து அவர்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கும் என்பது பற்றியும் கடந்த வாரம் நீங்கள் கேட்டக் கேள்விகள் குறித்து நான் ஆழமாகச் சிந்தித்தேன்.

" அக்கதையில் இன்னும் கூடுதலான விஷயங்கள் இருப்பதாக நான் நினைக்கிறேன். அவற்றை நான் உங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்."

ஒரு சுண்டெலி கண்சிமிட்டினால்கூடக் கேட்கும் அளவுக்கு அந்த இடம் மிகவும் அமைதியடைந்தது. "ஹெம்முக்கு என்ன நிகழ்ந்தது?" என்பதைப் பற்றித் தெரிந்து கொள்ள எல்லோரும் ஆர்வமாக இருந்தனர்.

டெனிஸ் தன் விளக்கத்தைத் துவக்கினார். " 'என் சீஸை நகர்த்தியது யார்?' கதையில் வரும் நிகழ்வுகள் உங்களுக்கு நினைவிருக்கும் என்று நான் நினைக்கிறேன் . . ."

## “ என் சீஸை நகர்த்தியது யார்?” நூலின் முன்கதைச் சுருக்கம்

நெடுங்காலத்திற்கு முன்பு, ஒரு தொலைதூர இடத்தில், நான்கு சிறிய கதாபாத்திரங்கள் வாழ்ந்து வந்தன. தமக்கு ஊட்டமளித்துத் தம்மை மகிழ்விக்கக்கூடிய சீஸைத் தேடி அவை ஒரு புதிர்ப்பாதை வழியாக ஓடிக் கொண்டிருந்தன. அந்த நான்கு கதாபாத்திரங்களில் ஸ்னிஃப், ஸ்கரி ஆகியவை இரண்டு சுண்டெலிகள். ஹெம், ஹா ஆகிய இருவரும் குட்டிமனிதர்கள்.

சிக்கலான அமைப்பைக் கொண்ட பல தாழ்வாரங்களும் அறைகளும் அந்தப் புதிர்ப்பாதையில் உள்ளடங்கியிருந்தன. சில அறைகளில் சுவையான சீஸ் இருந்தது. ஆனால், எந்த இடத்திற்கும் இட்டுச் செல்லாத இருண்ட மூலைகளும் முட்டுச்சந்துகளும்கூட அந்தப் புதிர்ப்பாதையில் இருந்தன.

ஒருநாள், ஒரு தாழ்வாரத்தின் முடிவிலிருந்த ‘ஸீ’ சீஸ் நிலையத்தில் தங்களுக்குப் பிடித்தமான சீஸ் இருந்ததை அவர்கள் அனைவரும் கண்டுபிடித்தனர். அன்றிலிருந்து, அந்த அற்புதமான சீஸை உண்டு மகிழுவதற்காக தினமும் அதே இடத்திற்கு அவர்கள் மீண்டும் மீண்டும் வந்து கொண்டே இருந்தனர்.

விரைவில், ஹெம்மும் ஹாவும் அந்த சீஸ் நிலையத்தைச் சுற்றித் தங்களுடைய வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். அந்த சீஸ் எங்கிருந்து வந்தது என்பது பற்றியோ அல்லது யார் அதை அங்கே கொண்டு வந்து வைத்தார்கள் என்பது பற்றியோ அவர்களுக்கு எதுவும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் அந்த சீஸ் எப்போதும் அங்கே இருக்கும் என்று அவர்கள் அனுமானித்துக் கொண்டனர்.

பிறகு ஒருநாள், அந்த சீஸ் அங்கு இல்லாமல் போயிற்று.

தங்களுக்குப் பிடித்தமான சீஸ் அங்கு இல்லாததைக் கண்ட ஸ்னிஃப் சுண்டெலியும் ஸ்கரி சுண்டெலியும் உடனடியாகப் புதிய சீஸைத் தேடிப் போய்விட்டன.

ஆனால் ஹெம்மும் ஹாவும் அப்படிச் செய்யவில்லை. மாறாக, அவர்கள் இருவரும் அதிர்ச்சியில் உறைந்து நின்றனர். அவர்களுடைய சீஸ் காணாமல் போய்விட்டது! இது எப்படிச் சாத்தியம்? யாரும்

முன்கூட்டியே அவர்களை எச்சரிக்கவில்லையே! இது சரியல்ல! விஷயங்கள் இப்படி இருக்கக்கூடாதே!

அவர்கள் பல நாட்கள் வருத்தத்தில் இருந்தனர்.

இறுதியில், ஸ்னிஃபும் ஸ்கரியும் அந்தப் புதிர்ப்பாதைக்குள் ஓடிவிட்டிருந்ததை கவனித்த ஹா, அவற்றைப் பின்தொடர்ந்து சென்று புதிய சீஸைத் தேடத் தீர்மானித்தான்.

" ஹெம், சில சமயங்களில் விஷயங்கள் மாறுகின்றன. அவை பிறகு ஒருபோதும் பழைய மாதிரி இருப்பதில்லை. நம்முடைய இந்தச் சூழ்நிலையும் அப்படிப்பட்ட ஒரு விஷயம்போலத் தெரிகிறது. வாழ்க்கை தொடர்ந்து ஓடிக் கொண்டே இருக்கிறது. நாமும் தொடர்ந்து நகர வேண்டும்," என்று ஹா கூறினான்.

பிறகு அவன் அங்கிருந்து போய்விட்டான்.

ஒருசில நாட்களுக்குப் பிறகு, ஒருசில துண்டுகள் புதிய சீஸுடன் ஹா மீண்டும் அந்த 'ஸீ' சீஸ் நிலையத்திற்குத் திரும்பி வந்தான். அவற்றில் சிறிதளவு சீஸை அவன் ஹெம்முக்குக் கொடுத்தான்.

ஆனால், தனக்கு அந்தப் புதிய சீஸ் பிடிக்காது என்று ஹெம் நினைத்தான். அது அவனுக்குப் பழக்கமான சீஸ் அல்ல. தன்னுடைய சொந்த சீஸ் தனக்கு மீண்டும் கிடைக்க வேண்டும் என்று அவன் விரும்பினான். எனவே, வேறு வழியின்றி, ஹா சற்றுத் தயக்கத்துடன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டான்.

அதன் பிறகு ஹெம் தன்னுடைய நண்பனான ஹாவை ஒருபோதும் சந்திக்கவே இல்லை.

## கதை தொடருகிறது: அடுத்து நிகழ்ந்தது என்ன . . .

பல நாட்களாக ஹெம் அந்த 'ஸீ' சீஸ் நிலையத்தின் அருகே தங்கியிருந்தான். அவன் பரிதவிப்புடனும் கோபத்துடனும் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான்.

அந்த சீஸ் நிலையத்தில் ஒவ்வொரு நாளும் அதிகமான சீஸ் தோன்றும் என்று அவன் இன்னும் எதிர்பார்த்தான். ஆனால் அது நிகழாதபோது, அதை அவனால் நம்ப முடியவில்லை. தான் விடாப்பிடியாகவும் பொறுமையாகவும் காத்திருந்தால், விஷயங்கள் நிச்சயமாக மாறும் என்று அவன் நம்பினான்.

ஆனால் விஷயங்கள் மாறவில்லை.

ஹா ஏன் திரும்பி வரவில்லை என்று யோசித்த ஹெம், அதற்கான பல்வேறு விடைகளைத் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

முதலில், " அவன் நிச்சயமாகத் திரும்பி வருவான். எந்த நேரத்திலும் அவன் இங்கு வரக்கூடும். அப்போது விஷயங்கள் இயல்பு நிலைக்குத் திரும்பும்," என்று அவன் தனக்குள் கூறிக் கொண்டான். ஆனால் அவன் இந்த நினைப்புடன் நெடுநாட்களாகக் காத்திருந்ததுதான் மிச்சம், ஹா மட்டும் திரும்பி வரவே இல்லை.

இது ஹெம்முக்கு அதிக வருத்தத்தை ஏற்படுத்தியது. இப்போது அவனுடைய சிந்தனை ஒரு வித்தியாசமான போக்கில் சென்றது.

" அவன் என்னை மறந்துவிட்டான்."

" அவன் என்னிடமிருந்து ஒளிந்து கொண்டிருக்கிறான்."

" அவன் வேண்டுமென்றே இப்படிச் செய்கிறான்! என் நண்பனான அவனால் எப்படி எனக்கு இவ்வாறு துரோகம் இழைக்க முடிந்தது?"

இந்தக் கடைசி எண்ணம் ஹெம்மைக் கோபம் கொள்ளச் செய்தது. அவன் அந்த எண்ணத்தின்மீது எவ்வளவு அதிகமாகத் தன் கவனத்தைக் குவித்தானோ, அவன் அவ்வளவு அதிகக் கோபம் கொண்டான்.

ஹா தன்னைத் தனியாக விட்டுவிட்டுச் சென்றிருந்தது குறித்தும், சீஸ் காணாமல் போயிருந்தது குறித்தும், தான் செய்த எதுவும் தன்னுடைய சூழ்நிலையைச் சரி செய்யவோ அல்லது மேம்படுத்தவோ உதவாமல்

போனது குறித்தும் ஹெம் கோபம் கொண்டான். இறுதியில், இதற்கு மேலும் பொறுத்துக் கொள்ள முடியாதவனாக, " இது நியாயமில்லை!" என்று உரக்கக் கத்தினான்.

தொடர்ந்து குறுக்கும் நெடுக்குமாக நடந்ததாலும் எப்போதும் வருத்தத்தில் உழன்றதாலும் களைத்துப் போன அவன், தன் மனங்கவர்ந்த நாற்காலியில் சோர்ந்து உட்கார்ந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினான்.

ஹா வழி தவறிப் போய்விட்டானா?

அவனுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்திருக்குமா? அல்லது அவன் ஏதேனும் ஆபத்தில் சிக்கியிருந்தானா?

ஹெம் இப்போது தன் கோபத்தைப் பற்றி முற்றிலுமாக மறந்து போனான். மாறாக, தன்னுடைய நண்பனைப் பற்றியும், அவனுக்கு ஏதேனும் மோசமான விஷயம் நிகழ்ந்திருக்குமோ என்பது பற்றியும் மட்டுமே அவன் சிந்தித்தான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு, அவனுடைய மனத்தில் ஒரு வித்தியாசமான கேள்வி முளைத்தது. "ஹா ஏன் திரும்பி வரவில்லை?" என்று யோசிப்பதற்கு பதிலாக, " நான் ஏன் அவனோடு போகவில்லை?" என்று அவன் யோசிக்கத் தொடங்கினான்.

தானும் ஹாவோடு சென்றிருந்தால் நிலைமை வேறு மாதிரி இருந்திருக்கும் என்றும், ஹா தொலைந்து போயிருக்க மாட்டான் என்றும், அவனுக்கு எந்தத் தீங்கும் நேர்ந்திருக்காது என்றும் அவன் அறிவுபூர்வமாகச் சிந்திக்கலானான். தான் அவனோடு சென்றிருந்தால், இப்போது தாங்கள் இருவருமாகச் சேர்ந்து சீஸைச் சாப்பிட்டுக் கொண்டிருப்போம் என்று அவன் நினைத்தான்.

சீஸோடு சேர்ந்து என்னுடைய நண்பன் நகர்ந்ததைப்போல நான் ஏன் நகரவில்லை?

நான் ஏன் ஹாவோடு போகவில்லை?

ஒரு சுண்டெலி எப்படி ஒரு சீஸ் துண்டைக் கொறித்தெடுக்குமோ, அதேபோல இக்கேள்விகள் ஹாவைத் துளைத்தெடுத்தன.

இதற்கிடையே, பசி அவனை அதிகமாக வாட்டத் தொடங்கியிருந்தது.

அவன் தன் நாற்காலியைவிட்டு எழுந்து இன்னும் சிறிது நேரம் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். அப்போது திடீரென்று அவனுடைய கால் எதன்மீதோ பட்டு இடறியது. அவன் குனிந்து அதைக் கையிலெடுத்தான். அதில் படிந்திருந்த தூசியை அவன் ஊதித் தள்ளிய பிறகுதான், அதை அவனால் அடையாளம் காண முடிந்தது.

அது ஒரு பழைய உளி.

முன்பொரு நாள், புதிய சீஸைத் தேடி 'ஸீ' சீஸ் நிலையத்தின் சுவரில் ஒரு பெரிய ஓட்டையைப் போடுவதற்காகத் தான் அந்த உளியைப் பிடித்திருந்தபோது ஹா அதை ஒரு சுத்தியலைக் கொண்டு ஓங்கி அடித்து அச்சுவரில் அந்த ஓட்டையை உண்டாக்கியது அவனுடைய நினைவுக்கு வந்தது.

அந்தச் சுத்தியலின் சத்தமும் உளியின் சத்தமும் அந்த அறையின் சுவர்கள்மீது பட்டு எதிரொலித்தபோது எழுந்த சத்தத்தை இப்போதுகூட அவனால் கேட்க முடிந்தது.

டொங்! டொங்! டொங்!

தாங்கள் பயன்படுத்தியிருந்த சுத்தியலை அவன் அந்தத் தரையில் தேடிக் கண்டுபிடித்து, அதன்மீது படிந்திருந்த தூசியையும் ஊதித் தள்ளினான். தானும் ஹாவும் சேர்ந்து சீஸைத் தேடி சென்று எவ்வளவு நீண்டகாலம் ஆகியிருந்தது என்பதை அப்போதுதான் அவன் உணர்ந்தான்.

அவன் தன் நண்பனை நினைத்து ஏங்கினான், அதிகமாகக் கவலை கொள்ளத் தொடங்கினான். அதிகமான சீஸ் தோன்றும் என்றும் ஹா திரும்பி வந்துவிடுவான் என்றும் இன்னமும் அவன் எதிர்பார்த்தான்.

ஆனால் அங்கு சீஸும் தோன்றவில்லை, ஹாவும் திரும்பி வரவில்லை.

அவன் ஏதேனும் செய்தாக வேண்டியிருந்தது. இனியும் வெறுமனே தன் வீட்டில் காத்திருப்பதில் அர்த்தமில்லை என்று நினைத்த அவன், அந்தப் புதிர்ப்பாதைக்குள் நுழைந்து சீஸைத் தேடுவதென்று தீர்மானித்தான்.

அவன் தன் வீட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் தேடித் தன்னுடைய ஷூக்களைக் கண்டுபிடித்து, அவற்றை அணிந்து கொண்டான். அவனும் ஹாவும் முதன்முதலாக சீஸைத் தேடிச் சென்றபோது அவர்கள் தங்களுடைய ஷூக்களை அணிந்து கொண்டுதான் ஓடினர். ஹெம்

தன்னுடைய ஷூக்களின் நாடாக்களை இறுக்கிக் கட்டிக் கொண்டே, தன்னுடைய தற்போதைய சூழ்நிலையை பற்றித் தான் தெரிந்து வைத்திருந்த தகவல்களைப் பரிசீலித்தான்.

தான் அதிக சீஸைக் கண்டுபிடிக்காவிட்டால் தான் இறந்துவிடுவோம் என்பதை அவன் அறிந்திருந்தான்.

புதிர்ப்பாதையானது இருண்ட மூலைகளையும் முட்டுச்சந்துகளையும் கொண்ட ஆபத்தான ஓர் இடம் என்பதையும் அவன் அறிந்திருந்தான். எனவே, அந்த இடத்தில் தான் அதிக எச்சரிக்கையோடு நடந்து கொள்ள வேண்டும் என்று அவன் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

இறுதியில், அந்தப் புதிர்ப்பாதை வழியாகச் சென்று, அதிகமான சீஸைக் கண்டுபிடித்து, அதை உட்கொண்டு உயிர்பிழைத்திருப்பது முற்றிலும் தன்னைச் சார்ந்தது என்பதையும், தான் தனியொருவனாக அதைச் செய்தாக வேண்டும் என்பதையும் அவன் உணர்ந்தான்.

மேற்குறிப்பிடப்பட்டத் தகவல்களைத் தான் மறந்துவிடக்கூடாது என்பதற்காக அவை அனைத்தையும் அவன் ஒரு தாளில் எழுதி, அதைத் தன் பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டான்.

## உண்மை நிலவரம்

1. நான் அதிகமான சீஸைக் கண்டுபிடித்தாக வேண்டும். இல்லாவிட்டால் நான் இறந்துவிடுவேன்.
2. இந்தப் புதிர்ப்பாதையானது இருண்ட மூலைகளையும் முட்டுச்சந்துகளையும் கொண்ட ஆபத்தான ஓர் இடம்.
3. இதிலிருந்து தப்பிப் பிழைப்பது முற்றிலும் என்னைச் சார்ந்தது. நான் தனியாக அதைச் சாதித்தாக வேண்டும்.

தன்னுடைய நிலைமை குறித்த உண்மைகள் அவனுக்குத் தெரிந்திருந்தது அவனுக்குத் தெம்பூட்டுவதாக இருந்தது. விஷயங்களின் உண்மை நிலையை அவன் அறிந்திருந்தான்.

அவன் அந்தச் சுத்தியலையும் உளியையும் பார்த்தான். புதிர்ப்பாதையின் வழியே பயணிக்கும்போது அதன் உட்பகுதிகளை ஆய்வு செய்வதற்கு அவை தனக்கு உதவும் என்று அவன் கருதினான்.

எனவே, அவன் அவற்றை எடுத்து ஒரு பைக்குள் போட்டுக் கொண்டு, அந்தப் பையைத் தன் தோளின்மீது தொங்கவிட்டான்.

உண்மைத் தகவல்கள், ஒரு வலிமையான சுத்தியல் மற்றும் உளியின் துணையுடன் அவன் அந்தப் புதிர்ப்பாதைக்குள் அடியெடுத்து வைத்தான்.

***

அடுத்த ஒருசில நாட்களுக்கு அவன் அந்தப் புதிர்ப்பாதையின் தாழ்வாரங்கள் வழியாகச் சுற்றித் திரிந்தான், அந்தப் புதிர்ப்பாதையின் உட்பகுதிகளுக்குச் சென்றான். தாழ்வாரங்கள் காலியாக இருந்தன. ஒருசில சிறிய கற்கள் மட்டும் அங்குமிங்கும் கிடந்தன. ஆனால் சீஸ் மட்டும் அவன் பார்வையில் படவே இல்லை.

அவன் ஒரு புதிய அறைக்கு வந்த ஒவ்வொரு முறையும், அவன் அந்த அறைக்குள் தன் தலையை நீட்டி, அங்கு ஏதேனும் சீஸ் இருந்ததா என்று தேடினான். ஆனால் எல்லா அறைகளும் காலியாக இருந்தன.

அடிக்கடி அவன் ஓர் இருண்ட மூலைக்கு வந்து சேர்ந்தான். அவ்வாறு நிகழ்ந்தபோது, அவன் விரைவாக அங்கிருந்து திரும்பி நேரெதிர்த் திசையில் சென்றான். அந்தப் புதிர்ப்பாதையில் தான் தொலைந்து போய்விடக்கூடாது என்பதில் அவன் உறுதியாக இருந்தான்.

அவன் அவ்வப்போது ஒரு முட்டுச்சந்தையும் கடந்து சென்றான். ஆனால் ஒவ்வொரு முறையும், அவன் அந்த வழியை உற்றுப் பார்த்துவிட்டு, அது உண்மையிலேயே ஒரு செங்கற்சுவரில்தான் போய் முடிந்தது என்பது உறுதியானவுடன் அங்கிருந்து விரைந்தான்.

சில இடங்கள் வழியாக அவன் பயணித்தபோது, ஹா அவ்வழியே பயணித்திருந்ததை அவனால் காண முடிந்தது. ஏனெனில், அந்தத் தாழ்வாரச் சுவர்கள்மீது ஹா ஒரு சீஸை வரைந்து அதில் ஏதோ எழுதிச் சென்றிருந்தான். ஆனால் அச்செய்திகள் எதையும் ஹெம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை.

நின்று நிதானமாக அவற்றைப் படிக்க முடியாத அளவுக்குப் பசியும் களைப்பும் ஒருசேர அவனை வாட்டின.

இவ்வளவு தூரம் பயணித்தப் பிறகும் சீஸுக்கான அறிகுறி மட்டும் இன்னும் தென்படவே இல்லை.

ஹெம் தொடர்ந்து அப்பாதையை ஆய்வு செய்தபோது, தன்னைக் குடைந்தெடுத்துக் கொண்டிருந்த அந்த ஒரு கேள்வியை அவன் தன் மனத்தில் மீண்டும் மீண்டும் அசை போட்டான்.

நான் ஏன் ஹாவோடு போகவில்லை?

உண்மையைக் கூற வேண்டுமென்றால், தங்கள் இருவரில் தான்தான் அறிவாளி என்று ஹெம் எப்போதுமே நினைத்து வந்திருந்தான். ஹா ஓர் அருமையான குட்டிமனிதன், ஒரு நல்ல தோழன். அவன் எப்போதும் ஒரு குதூகலமான மனநிலையைக் கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு நல்ல நகைச்சுவையுணர்வும் இருந்தது. ஆனால், அவன் ஒரு துணை விமானியே அன்றித் தலைமை விமானி அல்ல. ஹாவைப் பற்றி ஹெம் எப்போதும் இப்படித்தான் நினைத்து வந்திருந்தான்.

ஆனால் இப்போது தன் நினைப்பின்மீது அவனுக்கு சந்தேகம் வந்தது.

" எனக்கு வாய்ப்பு இருந்தபோது நான் ஏன் ஹாவுடன் போகவில்லை?" என்று அவன் தனக்குள் முணுமுணுத்தான்.

அவனுடைய பிடிவாதம் அதற்குக் காரணமா? அல்லது அவனுடைய முட்டாள்தனம் அதற்குக் காரணமா?

அல்லது, அவன் ஒரு மோசமான குட்டிமனிதனா?

அவன் ஒவ்வொரு தாழ்வாரமாகக் கடந்து சென்றபோது அவனுடைய மனத்தில் இந்தக் கேள்விகள் தொடர்ந்து ஓடிக் கொண்டே இருந்தன. "இது நான் செய்த ஏதோ ஒரு காரியத்திற்கு எனக்குக் கிடைத்துள்ள தண்டனைபோலும்," என்று அவன் சத்தமாகக் கூறினான்.

அவன் தன்னைப் பற்றி எவ்வளவு அதிக மோசமாக உணர்ந்தானோ, அவ்வளவு அதிகமாக அவனுடைய ஆற்றல் குறைந்தது. ஆனால் அவன் இதை கவனிக்கவில்லை. அவன் தன்னைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்த எண்ணங்கள் ஒரு புதிர்ப்பாதையில் ஓடுகின்ற ஒரு சுண்டெலியைப்போல அவனுடைய மனத்தின் ஊடாக ஓடிக் கொண்டிருந்ததைப் பற்றிய பிரக்ஞைகூட அவனுக்கு இருக்கவில்லை.

அப்போது ஒரு பயங்கரமான எண்ணம் அவனுக்குத் தோன்றியது. அது அவனை அதிர்ச்சியில் உறைய வைத்தது: "திக்குத் தெரியாமல் தொடர்ந்து இந்தப் புதிர்ப்பாதையில் ஓடிக் கொண்டே இருப்பதுதான் என் தலையெழுத்தோ என்னவோ!"

ஹெம்மின் கால்கள் குழலாடின. பிடிமானத்திற்காக அவன் அந்தத் தாழ்வாரச் சுவர்மீது சாய்ந்தான். பிறகு அப்படியே அவன் சறுக்கிக் கீழே விழுந்தான்.

எதிர்ப்புறச் சுவர்மீது ஹா எழுதிச் சென்றிருந்த ஒரு செய்தி இடம்பெற்றிருந்தது:




ஹெம் அதை நம்ப முடியாதவனாகத் தன் தலையை ஆட்டினான்.

" ஹா, நீ என்ன நினைத்துக் கொண்டிருந்தாய்? ஒன்று, சீஸ் இருக்கிறது அல்லது அது இல்லை. நம்பிக்கைகளுக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும்

இல்லை!” என்று ஹெம் முணுமுணுத்தான்.

தொடர்ந்து பயணிக்க முடியாத அளவுக்கு ஹா பலவீனமடைந்து தன் முயற்சியைக் கைவிட்டிருப்பானோ என்று முதன்முறையாக ஹெம்முக்குத் தோன்றியது. அந்த நிலைதான் இப்போது தனக்கு ஏற்பட்டுக் கொண்டிருந்ததா என்று அவன் யோசித்தான்.

திடீரென்று, தான் தனியாக விடப்பட்டிருந்தது போன்ற ஓர் உணர்வு அவனுள் எழுந்தது. பயம் அவனுடைய மனத்தைக் கவ்வியது.

எதுவுமே முன்புபோல இருக்கவில்லை. முன்பெல்லாம், ஹெம்மும் ஹாவும் அந்தப் புதிர்ப்பாதையில்தான் வேலை செய்திருந்தனர், அங்குதான் அவர்களுக்கு ஒரு சமூக வாழ்க்கையும் வாய்த்திருந்தது. அவர்கள் இருவரும் அந்தப் புதிர்ப்பாதையில்தான் வளர்ந்தனர், தங்கள் வாழ்க்கையை அங்குதான் அவர்கள் கட்டியெழுப்பினர். அந்தப் புதிர்ப்பாதைதான் ஹெம்மின் உலகமாக இருந்தது.

ஆனால் அந்தப் புதிர்ப்பாதை இப்போது மாறியிருந்தது.

இப்போது எல்லாமே வித்தியாசமாக இருந்ததுபோலத் தோன்றியது. ஹா போய்விட்டான், ஸ்னிஃபும் ஸ்கரியும் போய்விட்டன, சீஸ் போய்விட்டது. ஹெம் மட்டும் இப்போது அந்தத் தாழ்வாரங்களில் சுற்றித் திரிந்து கொண்டிருந்தான். நாளுக்கு நாள் அவன் மேன்மேலும் பலவீனமடைந்து கொண்டிருந்தான். இவையெல்லாம் ஏன் நிகழ்ந்து கொண்டிருந்தன என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அந்தப் புதிர்ப்பாதை இருட்டான மற்றும் ஆபத்தான ஓர் இடமாக ஆகியிருந்தது.

ஹெம் அந்தத் தரையின்மீது சுருண்டு படுத்துக் கொண்டு, நிம்மதியற்ற ஒரு தூக்கத்திற்குள் மூழ்கினான்.

***

அவன் லேசாகப் புரண்டபோது, தான் படுத்திருந்த தரைமீது கிடந்த ஏதோ சிலவற்றின்மீது தன்னுடைய பாதம் பட்டதை உணர்ந்தான். அவன் எழுந்து உட்கார்ந்து அவற்றைப் பார்த்தான். சிறிய, உருண்டையான கற்கள் அவை. அவை ஒவ்வொன்றும் அவனுடைய உள்ளங்கை அளவில் இருந்தன.

அவன் அவற்றில் ஒன்றை எடுத்து, அதன் வழுவழுப்பான, பளபளப்பான செந்நிற மேற்பரப்பை உணர்ந்தான். அது உண்மையில் ஒரு கல்லே அல்ல. அது ஓர் அருமையான வாசனையைக் கொண்டிருந்தது.

அதன் வாசனை மிகவும் நன்றாக இருந்ததால், ஹெம் அதைக் கடித்துப் பார்க்க விரும்பினான்.

பிறகு அவன் தன்னை சுதாரித்துக் கொண்டான். “நான் என்ன நினைத்துக் கொண்டிருந்தேன்? இந்தப் பொருள் எதுவாக இருந்தாலும் சரி, ஆனால் இது நிச்சயமாக சீஸ் அல்ல,” என்று அவன் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

அப்பொருள் ஆபத்தானதாக இருக்கக்கூடும் என்று அவன் நினைத்தான்.

அவன் சுற்றுமுற்றும் பார்த்தபோது, அதிர்ச்சியில் அவன் கிட்டத்தட்டத் துள்ளிக் குதித்தான்.

அவனுக்கு அருகே இன்னொரு குட்டிநபர் அமர்ந்து கொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்! அவர் ஹா அல்ல. அவர் தங்களுடைய பழைய நண்பர்களில் எவரும் அல்ல என்று ஹெம்முக்குத் தோன்றியது. இந்தக் குட்டிநபரை ஹெம் இதற்கு முன்பு ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. அவள் ஒரு குட்டிப்பெண்.

தான் அந்தப் புதிய குட்டிநபரைப் பார்த்துப் புன்னகைத்துவிட்டு வணக்கம் கூற வேண்டுமா அல்லது அவரைக் கண்டு பயப்பட வேண்டுமா என்று ஹெம்முக்குத் தெரியவில்லை.

அந்தக் குட்டிப்பெண் அந்தச் செந்நிறப் பொருட்களில் ஒன்றைத் தன் கையில் எடுத்து அதை ஹெம்மை நோக்கி நீட்டி, “ நீ பசியால் வாடிக் கொண்டிருப்பதுபோலத் தெரிகிறாய்,” என்று கூறினாள்.

“ ஆனால் என்னால் இதைச் சாப்பிட முடியாது. இது சீஸ் அல்ல!” என்று ஹெம் கூறினான்.

“ என்ன இல்லை??”

“ சீஸ்! இது சீஸ் அல்ல,” என்று ஹெம் மீண்டும் கூறினான்.

அவள் இதற்கு பதிலேதும் கூறவில்லை. மாறாக, அவள் குழப்பத்தோடு அவனைப் பார்த்தாள்.

“ சீஸ் என்பது ‘உணவின்’ இன்னொரு பெயர். எல்லோரும் சீஸை உட்கொள்ளுகின்றனர். சுண்டெலிகள்கூட அதைச் சாப்பிடுகின்றன,” என்று ஹெம் பொறுமையாக விளக்கினான்.

“ ஓ!” என்று அப்பெண் கூறினாள். அவர்கள் இருவரும் ஒரு கணம் அமைதியாக இருந்தனர். பிறகு அவள், “ நான் ‘சீஸ்’ சாப்பிடுவதில்லை. அதை நான் பார்த்ததுகூட இல்லை,” என்று கூறினாள்.

இதை நம்புவது ஹெம்முக்குக் கடினமாக இருந்தது. சீஸ் சாப்பிடாத ஒரு குட்டிநபர் இருக்க முடியுமா? சாத்தியமே இல்லை!

அந்தப் பெண் தன் கையில் இருந்த அந்தக் குட்டிக் கல்லை இன்னும் ஹெம்மை நோக்கி நீட்டிக் கொண்டிருந்தாள். ஆனால் அவன் அதைப் பார்த்துவிட்டு, அது தனக்கு வேண்டாம் என்று கூறும் விதமாகத் தன் தலையை ஆட்டினான்.

“ அது எதுவாக இருந்தாலும், அதை என்னால் சாப்பிட முடியாது. நான் சீஸ் மட்டுமே சாப்பிடுவேன்,” என்று அவன் கூறினான்.

பிறகு அவன் மீண்டும் வருத்தத்தோடு தரையின்மீது படுத்துக் கொண்டான். ஒருசில கணங்கள் கழித்து, அந்தக் குட்டிப்பெண் பின்வருமாறு கூறியது அரைகுறையாக அவனுடைய காதில் விழுந்தது:

“ நீ நினைப்பதைவிட அதிகமானவற்றை உன்னால் செய்ய முடியும் என்று நான் துணிந்து பந்தயம் கட்டுவேன் . . .”

ஆனால் ஹெம் ஏற்கனவே தூங்கிவிட்டிருந்தான்.

ஒருசில மணிநேரம் கழித்து அவன் கண்விழித்தபோது, முன்பு ஒருபோதும் தான் அனுபவித்திராத ஒரு தீவிரப் பசியை அவன் உணர்ந்தான். “இரவுச் சாப்பாட்டிற்கான நேரம் வந்துவிட்டது!” என்று அவன் நினைத்தான். அவனுடைய சூழ்நிலையின் யதார்த்தம் வேகமாக வந்து அவனைத் தாக்கியது.

சீஸ் இல்லை. இரவுச் சாப்பாடும் இல்லை.

அவன் எழுந்து உட்கார்ந்தான். அந்தப் பெண் போய்விட்டிருந்தாள், ஆனால் அச்சிறிய செந்நிறக் கற்கள் இன்னும் அங்கு இருந்தன. அவன் அவற்றில் ஒன்றைக் கையிலெடுத்து மீண்டும் முகர்ந்து பார்த்தான். அதிலிருந்து இனிப்பு மணம் வந்தது.

தான் என்ன செய்து கொண்டிருந்தோம் என்பதைப் பற்றிச் சிந்திக்கும் முன்பாகவே அவன் அதைத் தன் வாயில் வைத்துக் கடித்தான்.

அது மொரமொரப்பாகவும், ஆனால் சாறு நிறைந்ததாகவும் இனிப்பாகவும் இருந்தது! அவன் இதற்கு முன்பு சாப்பிட்டிருந்த எந்தவொரு சீஸைப்போலவும் அது இருக்கவில்லை. அவன் அந்தக் கல்லை முழுமையாகச் சாப்பிட்டான். அது அவ்வளவு சுவையாக இருந்தது!

பிறகு அவன் மீண்டும் படுத்துக் கொண்டு முனகினான். "நான் என்ன காரியம் செய்துவிட்டேன்? நான் ஒரு கல்லைச் சாப்பிட்டுவிட்டேனே!" என்று அவன் அரற்றினான். தான் இறந்துவிடுவோம் என்று அவன் உறுதியாக நம்பினான்.

ஒருசில நிமிடங்களில் அவன் மீண்டும் ஆழ்ந்து தூங்கிவிட்டான்.

பல நாட்களுக்குப் பிறகு முதன்முறையாக அவன் அன்று இரவு நெடுகிலும் அயர்ந்து தூங்கினான்.

மறுநாள் காலையில் அவன் விழித்தெழுந்தபோது, அந்தக் குட்டிப்பெண் மீண்டும் அங்கு வந்திருந்தாள். அவள் கீழே உட்கார்ந்து தன் கால்முட்டுக்களைத் தன் கைகளால் கட்டிக் கொண்டு அவனை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்தாள்.

" நீ சாகவில்லை," என்று அவள் கூறினாள்.

" இல்லை, நான் சாகவில்லை," என்று ஹெம் ஆமோதித்தான்.

உண்மையில், தான் சற்று அதிக வலிமை பெற்றிருந்ததுபோல அவன் உணர்ந்தான்.

அவள் இன்னொரு கல்லை அவனிடம் நீட்டிக் கொண்டிருந்தாள். ஹெம் அதை அவளிடமிருந்து வாங்கி அதையும் உட்கொண்டான். அது நிச்சயமாக சீஸ் அல்ல, ஆனால் அது சுவையாக இருந்தது. அவன் அதைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, தனக்கு மீண்டும் தெம்பு வந்து கொண்டிருந்ததை அவனால் உணர முடிந்தது.

அதே நேரம், அப்பெண் அவனிடம் பேசத் தொடங்கினாள். "என் பெயர் ஹோப். இங்கிருந்து வெகு அருகே உள்ள 'ஏ' பழ நிலையத்தில் நான் வசிக்கிறேன். நீ சாப்பிட்டது ஒரு பழம். இவற்றுக்கு 'ஆப்பிள்கள்' என்று பெயர்," என்று அவள் கூறினாள்.

இப்போது ஹெம் தன்னுடைய மூன்றாவது ஆப்பிளை மும்முரமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

சமீப காலமாகப் பழங்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து கொண்டே வந்ததாகவும், கடந்த சில நாட்களாகப் புதிய பழங்களைத் தேடி அந்தப் புதிர்ப்பாதையின் பல்வேறு பகுதிகளைத் தான் ஆய்வு செய்து வந்திருந்ததாகவும் அவள் ஹெம்மிடம் கூறினாள்.

" முன்பெல்லாம் நான் தினமும் காலையில் கண்விழிக்கும்போது அதிகமான ஆப்பிள்கள் இருக்கும். ஆனால் இப்போது அவற்றின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது," என்று அவள் கூறினாள்.

அவள் இப்போது ஹெம் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆப்பிளைச் சுட்டிக்காட்டி, " உண்மையில், உன் கையில் உள்ள அந்த ஆப்பிள்தான் என்னுடைய கடைசி ஆப்பிள்," என்று கூறினாள்.

அந்த ஆப்பிளைக் கடித்துக் கொண்டிருந்த ஹெம் அப்படியே உறைந்து போய் அவளைப் பார்த்தான். "ஆப்பிள்களும் காணாமல் போய்விட்டனவா?" என்று அவன் கேட்டான்.

அவள் அதை ஆமோதித்துத் தலையசைத்துவிட்டு, " ஆப்பிள்களின் வரவு நின்றுவிட்டது. ஆனால் அதற்கான காரணம் எனக்குத் தெரியவில்லை," என்று கூறினாள்.

ஹெம் தன் கையில் எஞ்சியிருந்த கொஞ்சநஞ்ச

ஆப்பிளைப் பார்த்துவிட்டு, பிறகு மீண்டும் அப்பெண்ணைப் பார்த்தான். "உன்னுடைய கடைசி ஆப்பிளையா நீ எனக்குக் கொடுத்தாய்?" என்று அவன் கேட்டான்.

அவள் அதிகம் அலட்டிக் கொள்ளாதவளாக, " நீ மிகவும் பசியோடு இருந்ததுபோலத் தெரிந்தாய்," என்று கூறினாள்.

" அது உண்மைதான். ஆனால் உனக்கும் பசிக்கிறது, இல்லையா?"

" லேசாகப் பசிக்கிறது," என்று அவள் ஒப்புக் கொண்டாள்.

அவள் தனக்குக் கொடுத்திருந்த அனைத்து ஆப்பிள்களையும் பற்றி நினைத்துப் பார்த்த ஹெம், தான் அவளுக்கு ஒருபோதும் நன்றி கூறியிருக்காததை உணர்ந்தான்.

" மிக்க நன்றி," என்று அவன் கூறினான்.

“ இதிலென்ன இருக்கிறது? பரவாயில்லை,” என்று அவள் பதிலளித்தாள்.

ஹெம் ஆச்சரியத்துடன், “ இவற்றைச் சாப்பிட்டப் பிறகு எனக்குப் புதுத் தெம்பு கிடைத்திருப்பதுபோல நான் உணருகிறேன். என்னால் அதை நம்ப முடியவில்லை!” என்று கூறினான்.

ஹோப் புன்னகைத்துவிட்டு, “ இதை நீ நம்பத்தான் வேண்டும். அது ஒன்றும் கடினமானது அல்ல. நீ முயற்சித்துப் பார்,” என்று கூறினாள்.

இதைக் கேட்டு ஹெம் குழப்பமடைந்தான். தான் எதை முயற்சித்துப் பார்க்க வேண்டும் என்று அவன் யோசித்தான். அவள் எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாள் என்பது அவனுக்குப் புரியவில்லை.

ஒரு விஷயம் மட்டும் அவனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது: அவனுக்கு இன்னும் பசித்தது.

சாப்பாடு பற்றிய இந்தப் பேச்சு, தான் அந்தப் புதிர்ப்பாதையில் ஏன் இருந்தோம் என்பதை ஹெம்முக்கு நினைவுபடுத்தியது. அந்த விநோதமான புதிய உணவை உட்கொண்டதிலிருந்து அவன் மீண்டும் வலிமை பெறத் தொடங்கியிருந்ததால், மீண்டும் சீஸைத் தேடிச் செல்லுவதற்கான நேரம் வந்துவிட்டிருந்தது.

இக்கணம்வரை அவன் தன்னுடைய தேடலில் தோற்றுப் போயிருந்தான். அதற்கான காரணம் என்னவென்று அவன் துல்லியமாக அறிந்திருந்தான்.

“ நான் போதுமான அளவு கடினமாக முயற்சி செய்திருக்கவில்லை. இந்தப் புதிர்ப்பாதையில் நான் இன்னும் ஆய்வு செய்திராத பகுதிகளை நான் ஆய்வு செய்தாக வேண்டும்,” என்று அவன் விளக்கினான்.

“ உனக்கு ஆட்சேபம் இல்லை என்றால், நானும் உன்னோடு வருகிறேன்,” என்று ஹோப் கூறினாள்.

( தாங்கள் இருவரும் தங்களுடைய இக்கட்டான நிலையிலிருந்து எப்படி விடுபடவிருந்தோம் என்பதை ஹோப் அறியவில்லை, ஆனால் இறுதியில் எப்படியும் தாங்கள் விடுபடுவோம் என்று அவள் உறுதியாக நம்பினாள்.)

ஹெம் சற்றுத் தயக்கதோடு அதற்கு இசைவு தெரிவித்தான். தனக்குத் துணையாக ஒருவர் இருப்பது நல்லதுதான் என்று அவன் நினைத்தான். அவன் தரையைவிட்டு எழுந்தபோது, எதிர்ப்புறச் சுவரின்மீது தன்னுடைய

நண்பன் ஹா எழுதி வைத்திருந்த சுவாரசியமான குறிப்பை மீண்டும் கவனித்தான்:




ஹெம் அந்தக் குறிப்பைப் பார்த்து, " நீ கூறுவது உண்மையாக இருக்கலாம். ஆனால், புதிய சீஸ் இருக்கும் இடத்திற்கு எது இட்டுச் செல்லும் என்று நான் உனக்குக் கூறுகிறேன். கடினமான முயற்சிதான் அங்கு இட்டுச் செல்லும்!" என்று கூறினான்.

இவ்வாறு கூறியபடி, அவன் தன்னுடைய கருவிகள் அடங்கிய பையைத் தன் தோளின்மீது தொங்கவிட்டான். பிறகு அவனும் ஹோப்பும் அங்கிருந்து புறப்பட்டு, ஒவ்வொரு தாழ்வாரமாகக் கடந்து சென்றனர், ஒவ்வோர் அறைக்குள்ளும் தங்கள் தலைகளை நீட்டிப் பார்த்தனர். இருண்ட மூலைகளையும் முட்டுச்சந்துகளையும் கவனமாகத் தவிர்த்தபடி அவர்கள் பயணித்தனர்.

அவர்கள் கண்டுபிடித்த ஒவ்வோர் அறையும் காலியாக இருந்தது. ஆனால் தான் தன் முயற்சியைக் கைவிடப் போவதில்லை என்பதில் ஹெம் உறுதியாக இருந்தான்.

அவர்கள் நடந்து சென்று கொண்டிருந்தபோது, பழைய நாட்களைப் பற்றி அவன் ஹோப்பிடம் நினைவுகூர்ந்தான். "நானும் ஹாவும் எங்களுடைய நண்பர்களான ஸ்னிஃப் மற்றும் ஸ்கரியோடு சேர்ந்து தினமும் சீஸைத் தேடிச் சென்றோம். அந்தக் காலத்தில் சீஸ் அபரிமிதமாக இருந்தது. அதைக் கண்டுபிடிப்பதும் சுலபமானதாக இருந்தது. அது எங்களுக்காகவே அங்கே இருந்தது. நாங்கள் வசித்த இடத்திற்கு அருகே இருந்த ஒருசில தாழ்வாரங்களில் தேடினால் சீஸ் நிச்சயமாக அங்கே இருக்கும்.

" சிக்கலற்ற, எளிமையான நாட்கள் அவை," என்று கூறிவிட்டு அவன் அமைதியானான். அவனும் ஹோப்பும் தங்களுடைய தேடலைத் தொடர்ந்தனர்.

காலம் மாறியிருந்தது. ஹெம்மும் முற்றிலும் மாறியிருந்தான். முன்பு அவன் வலிமையும் பெருமிதமும் கொண்டவனாக இருந்தான். அவன் மிகுந்த தன்னம்பிக்கை கொண்டவனாக இருந்ததால், பிற குட்டிமனிதர்கள் அவனைக் கண்டு பிரமித்தனர், அவனுடைய வழிகாட்டுதலை நாடினர்.

ஆனால் சீஸ் காணாமல் போனது அதையெல்லாம் முற்றிலுமாக மாற்றியிருந்தது. அதைத் தொடர்ந்து நிகழ்ந்தவை அவன்மீது ஒரு பெரிய பாதிப்பை ஏற்படுத்தின. அவன் தன் வலிமையையும் பெருமிதத்தையும் இழந்துவிட்டான்.

அவன் இவற்றையெல்லாம் நினைவுகூர்ந்தபோது, தன்னுடைய தன்னம்பிக்கையும் முன்பைவிட வெகுவாகக் குறைந்திருந்ததை அவன் உணர்ந்தான். தன்னுடைய வழக்கமான தன்னம்பிக்கை ஆட்டம் கண்டிருந்ததை அவனால் பார்க்க முடிந்தது.

இது ஹெம்முக்குப் புதிதாக இருந்தது.

இதற்கு முன்பு அவன் தன்னுடைய சொந்த எண்ணங்களை உண்மையில் ஒருபோதும் உன்னிப்பாக கவனித்ததே இல்லை. விஷயங்களைத் தான் பார்த்த விதத்தைப் பற்றியும் அவன் ஒருபோதும் பரிசீலித்ததில்லை.

விஷயங்களை உள்ளது உள்ளபடியே அவன் பார்த்தான், அவ்வளவுதான்.

அவனும் ஹோப்பும் தொடர்ந்து அந்தத் தாழ்வாரங்களின் வழியாக நடந்தபோது, அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒருசில புதிய சீஸ் துண்டுகளை அவர்கள் கண்டனர். ஹெம்மின் பசியைத் தணிக்க அவை போதுமானவையாக இருந்தன. அவன் அவற்றைக் கடித்தபடி தன் நடையைத் தொடர்ந்தான்.

ஹோப்பும் சில சீஸ் துண்டுகளைச் சாப்பிட்டாள். அவளுக்கு அது ஓரளவுதான் பிடித்திருந்தது.

அவ்வப்போது அவர்கள் ஒரு ஆப்பிளையும் கண்டனர். அது ஏதேனும் ஒரு சுவரின் கீழே நிலத்தில் கிடந்தது. அவர்கள் இருவரும் அதைப் பகிர்ந்து உட்கொண்டனர்.

அவர்கள் தங்கள் தேடலை முடித்துவிட்டுத் தங்களுடைய துவக்கப் பகுதிக்குத் திரும்பிச் சென்று ஓய்வெடுத்துவிட்டு மறுநாள் தங்கள் தேடலைத் துவக்கத் தேவையான தெம்பை அந்த சீஸ் துண்டுகளும் ஆப்பிள்களும் அவர்களுக்குக் கொடுத்தன.

ஒவ்வொரு நாளும் அவர்கள் தங்கள் பயணத்தைத் துவக்கியபோது, தன்னுடைய ஆற்றல் முந்தைய நாளைவிடக் குறைந்திருந்ததாக ஹெம் உணர்ந்தான்.

எந்தப் பலனையும் கொடுக்காத மணிக்கணக்கான தேடலுக்குப் பிறகு அவர்கள் மீண்டும் தங்களுடைய பழைய இடத்திற்குத் திரும்பியபோது, ஹெம் அதிகக் களைப்பாக உணர்ந்தான், தன்னுடைய கருவிகள் அடங்கிய பையைக் கீழே போட்டுவிட்டுத் தாழ்வாரச் சுவரின்மீது சாய்ந்து உட்கார்ந்தான். ஒவ்வொரு நாளும் இப்படித்தான் கழிந்தது.

ஒருநாள் அவர்கள் திரும்பி வந்தபோது, தன்னால் தொடர்ந்து முயற்சிக்க முடியுமா என்ற சந்தேகம் எழும் அளவுக்கு ஹெம் மிகவும் ஊக்கமிழந்திருந்தான். தன்னுடைய கருவிகள் அடங்கிய பை மிகவும்

கனமாக இருந்தது என்ற நினைப்பு மட்டுமே அவனுடைய மனத்தில் இருந்தது.

“ அந்தப் பை மிகவும் கனமாக இருக்கிறது என்று நான் நினைக்கிறேன்,” என்று ஹோப் கூறினாள்.

“ அது அவ்வளவு மோசமில்லை,” என்று ஹெம் கூறினான். அது மிகவும் கனமாக இருந்ததையும், தான் மிகவும் களைத்துப் போயிருந்ததையும் அவன் அவளிடம் ஒப்புக் கொள்ள விரும்பவில்லை.

“ இதை நீ ஏன் தினமும் உன்னுடன் எடுத்து வருகிறாய்?” என்று அவள் கேட்டாள்.

“ சுவரில் துளைகள் ஏற்படுத்துவதற்காகத்தான். நாம் சரியான சுவரைக் கண்டுபிடித்தால், நீ இந்த உளியைப் பிடித்துக் கொள்ளலாம். நான் அதைச் சுத்தியலைக் கொண்டு அடிப்பேன். நானும் ஹாவும் இவ்வழியே சுற்றித் திரிந்தபோது, நான் உளியைப் பிடித்துக் கொள்ளுவேன், அவன் சுத்தியலால் அதை அடிப்பான்,” என்று அவன் கூறினான்.

“ ஓ, அப்படியா?” என்று கூறிய ஹோப், “ முன்பு அது உங்களுக்குப் பலனளித்ததா?” என்று கேட்டாள்.

“ ஆமாம்,” என்று ஹெம் பதிலளித்தபோதிலும், அவள் ஏகப்பட்டக் கேள்விகள் கேட்டதாக அவன் நினைத்தான். “இருப்பதிலேயே மிகச் சிறந்த உளி இதுதான்!” என்று அவன் கூறினான்.

“ நான் அதைப் பற்றிக் கேட்கவில்லை. சுவரில் துளைகள் இடுவது அதிகமான சீஸைக் கண்டுபிடிக்க உனக்கு உதவுமா என்றுதான் நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்,” என்று ஹோப் கூறினாள்.

ஹெம் இதற்கு பதிலளிக்கவில்லை. இக்கேள்வி தன்னை அவமானப்படுத்தியதாக அவன் கருதினான். இவை நல்ல கருவிகள்! அவன் வழக்கம்போலத் தன்னுடைய பையைப் பொத்தென்று கீழே போட்டுவிட்டு, களைப்போடு சுவர்மீது சாய்ந்து உட்கார்ந்தான்.

ஹாவின் நினைப்பு அவனை வாட்டியது. தான் தன் வீட்டிலிருந்து இவ்வளவு தொலைவில் இந்தப் புதிர்ப்பாதையில் இருந்ததை அவன் விரும்பவில்லை. விஷயங்கள் பழைய நல்ல நிலைமைக்கு மாற வேண்டும் என்று அவன் விரும்பினான்.

“ உனக்கு உன் நண்பனைத் தேடுகிறது, இல்லையா?” என்று ஹோப் கேட்டாள்.

தான் என்ன சிந்தித்துக் கொண்டிருந்தோமோ, ஒவ்வொரு முறையும் அவள் அதைத் துல்லியமாகக் கண்டுபிடித்தது ஹெம்முக்கு லேசான கலக்கத்தைக் கொடுத்தது.

“ விஷயங்கள் பழைய நிலைக்குத் திரும்பினால் நன்றாக இருக்கும்!” என்று ஹெம் கூறினான்.

ஹோப் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, சுவரின்மீது சாய்ந்து கொண்டாள்.

“ நீ கூறுவது எனக்குப் புரிகிறது,” என்று கூறிய அவள், ஹெம்மை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, “ ஆனால் அது எப்படி நமக்குப் பலனளிக்கும் என்று எனக்குத் தெரியவில்லை,” என்று கூறினாள்.

இதைக் கேட்டு எரிச்சலுற்ற ஹெம், “ நீ என்ன சொல்லுகிறாய்?” என்று வெடுக்கென்று கேட்டான்.

“ விஷயங்கள் ஒருபோதும் பழைய மாதிரி ஆவதில்லை என்று நான் நினைக்கிறேன். ஆனால், அவை முன்பைவிடச் சிறப்பாக ஆவதற்கான சாத்தியம் இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது,” என்று ஹோப் கூறினாள்.

அது எப்படி என்பதை ஹெம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை.

“ கடினமாக முயற்சித்தல் என்ற நம்முடைய திட்டம் நமக்கு உதவுவதுபோலத் தெரியவில்லை, இல்லையா?” என்று ஹோப் மென்மையாகக் கேட்டாள்.

ஹெம் அதற்கு பதிலேதும் கூறவில்லை. அவன் இருப்புக் கொள்ளாமல் தவித்தான்.

“ நமக்கு ஒரு வித்தியாசமான உத்தி தேவை என்று நான் நினைக்கிறேன்,” என்று அவள் கூறினாள்.

ஹெம் அவளை ஏறிட்டுப் பார்த்தபோது, ‘ பழைய நம்பிக்கைகள் புதிய சீஸுக்கு ஒருபோதும் வழிநடத்திச் செல்லுவதில்லை’ என்ற ஹாவின் குறிப்பை அவள் பார்த்துக் கொண்டிருந்ததை அவன் கண்டான்.

“ நாம் ஒரு புதிய நம்பிக்கையை முயற்சித்துப் பார்த்தால் என்ன?” என்று ஹோப் கேட்டாள்.

“ ஒரு நம்பிக்கையை நம்மால் முயற்சித்துப் பார்க்க முடியாது. நம்பிக்கைகள் என்பவை வெறுமனே இருக்கின்றன, அவ்வளவுதான்!” என்று ஹெம் கூறினான்.

ஹோப் ஹாவின் சுவர்க்குறிப்பை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, “ ஒரு நம்பிக்கையை மாற்றப் போவதாக நீ தீர்மானித்தால் என்னவாகும்?” என்று ஹெம்மிடம் கேட்டாள்.

“ அது சரிப்பட்டு வராது. மேலும், என்னுடைய நம்பிக்கைகள், உள்ளது உள்ளபடியே எனக்குப் பிடித்திருக்கின்றன! நான் அவற்றை மாற்றினால், நான் யாராக இருப்பேன்? நான் நிச்சயமாக ஹெம்மாக இருக்க மாட்டேன், இல்லையா?” என்று ஹெம் விளக்கினான்.

அவன் மாறவும் விரும்பவில்லை, தன்னுடைய நம்பிக்கைகளை விட்டுக் கொடுக்கவும் விரும்பவில்லை. ஏனெனில், தான் யாராக இருந்தோமோ அப்படிப்பட்ட ஒருவனாகத் தான் உருவெடுத்திருந்ததற்கு அந்த நம்பிக்கைகள்தான் காரணம் என்று அவன் நினைத்தான்.

“ ஆனால் நீ உன் மனத்தை மாற்றிக் கொள்ளுவாய் என்று நான் பந்தயம் கட்டுகிறேன்,” என்று அவள் கூறினாள்.

இப்போது அவன் உண்மையிலேயே எரிச்சலடைந்தான். “நான் ஏன் என் மனத்தை மாற்றிக் கொள்ளப் போகிறேன்? என் மனம் இப்போது உள்ளபடியே எனக்குப் பிடித்திருக்கிறது.”

“ எனக்கும்தான் பிடித்திருக்கிறது. ஆனால் நாம் இன்னும் சீஸ் எதையும் கண்டுபிடிக்கவில்லையே!” என்று அவள் கூறினாள்.

அதற்கு ஹெம்மிடம் பதிலேதும் இருக்கவில்லை.

அவர்கள் இருவரும் ஒரு நிமிடம் மௌனமாக இருந்தனர். இறுதியில், ஹோப் அங்கிருந்து எழுந்து, “ சரி, நாம் காலையில் சந்திக்கலாம். இப்போது இனிய கனவுகளோடு நன்றாகத் தூங்கு,” என்று கூறினாள்.

ஹெம் கவலையோடு சுவரின்மீது சாய்ந்து உட்கார்ந்திருந்தான். தன்னுடைய சுத்தியலையும் உளியையும் பற்றி ஹோப் கூறியிருந்ததைப் பற்றி அவன் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

சுவரில் துளைகள் இடுவது அவர்களுக்கு எந்த விதத்திலும் உதவாது என்பது உண்மைதான். ஆனால் அது முன்பே அவனுக்குத் தெரியுமல்லவா? அப்படியானால், அவன் ஏன் இந்தப் பழைய கருவிகளைச் சுமந்து திரிந்து கொண்டிருந்தான்?

வேறு என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியாததுதான் அதற்குக் காரணம்.

" நாங்கள் ஒருபோதும் சீஸைக் கண்டுபிடிக்கப் போவதில்லை. நான் என் நண்பன் ஹாவையும் இனி ஒருபோதும் பார்க்கப் போவதில்லை. பயனற்ற இந்தக் கருவிகளோடு நான் இந்தத் தாழ்வாரத்திலேயே சாகப் போகிறேன். அதுதான் நடக்கப் போகிறது," என்று அவன் நினைத்தான்.

அதைத் தொடர்ந்து அவன் நீண்ட பெருமூச்செறிந்தான். பிறகு, அவன் தன்னுடைய தேடலைத் தொடங்கியதிலிருந்தே அவனுடைய மனத்தை நச்சரித்து வந்திருந்த அந்தக் கேள்வியை அவன் மீண்டும் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்:

நான் ஏன் ஹாவுடன் போகவில்லை?

அதைக் கேட்டுவிட்டு அவன் அழத் தொடங்கினான்.

விரைவில், அவன் தூங்கி விழுந்தான்.

***

அன்றிரவு அவனுக்கு ஒரு கனவு வந்தது.

அந்தக் கனவில், தான் மீண்டும் 'ஸீ' சீஸ் நிலையத்திற்கு அருகே இருந்த தன்னுடைய வீட்டில் கோபத்தோடும் விரக்தியோடும் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்ததை அவன் கண்டான். ஆனால் அங்கு ஏதோ வித்தியாசமாக இருந்தது. ஆனால் அது எது?

பிறகு அதை அவன் கண்டான். சன்னல்களில் கம்பிகள் பொருத்தப்பட்டிருந்தன! தான் ஒரு சிறையில் இருந்ததுபோல அவனுக்குத் தோன்றியது. அந்தக் கம்பிகளின் வழியாகத் தன்னைப் பார்த்த அவன், தான் எவ்வளவு மகிழ்ச்சியற்று இருந்தோம் என்பதைக் கண்டான். தூக்கத்தில் அவன் இன்னும் சிறிது அழுதான்.

அந்தக் கனவைப் பற்றி நினைத்துக் கொண்டே நடு இரவில் அவன் கண்விழித்தான். அது அவனுக்குக் குழப்பம் ஏற்படுத்தியது. தன்னுடைய

சொந்த வீட்டிலேயே தான் ஒரு கைதியாக இருந்தபோதிலும், தன் நண்பனின் பிரிவு தன்னை வருத்திக் கொண்டிருந்தபோதிலும், தான் ஏன் ஹாவோடு போக மறுத்தோம் என்று அவன் யோசித்தான்.

அவன் மல்லாக்கப் படுத்துக் கொண்டு அதைப் பற்றிப் பல மணிநேரம் சிந்தித்தான். பொழுது விடியும்வரை அவனுடைய சிந்தனை நீடித்தது.

பழைய நம்பிக்கைகள் மற்றும் புதிய சீஸ் பற்றி ஹா அந்தச் சுவரின்மீது எழுதியிருந்த வாசகத்தை அந்த அதிகாலை வெளிச்சத்தில் ஹெம் மீண்டும் படித்தான்.

" ஹாவின் கருத்து சரிதான்," என்று அவன் அமைதியாகக் கூறினான். (வாய்விட்டுச் சொல்லிச் சிந்திப்பது அவன் தன்னுடைய எண்ணங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள அவனுக்கு உதவியது. குறிப்பாக, தற்போது அவன் சிந்தித்துக் கொண்டிருந்தது போன்ற கடினமான எண்ணங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள அது வெகுவாக உதவியது.)

நெடுங்காலத்திற்கு முன்பு ஹா இங்கிருந்து புறப்பட்டுச் சென்ற நாளைப் பற்றி ஹெம் நினைத்துப் பார்த்தான். தாங்கள் என்ன செய்தாக வேண்டும் என்று ஹா நினைத்தானோ, அதைப் பற்றி ஹெம்மிடம் பேச அவன் முயற்சித்திருந்தான், ஆனால் ஹெம் அதைக் காதுகொடுத்துக் கேட்க மறுத்துவிட்டிருந்தான்.

" என் யோசனைதான் சரியானது என்றும், ஹாவின் எண்ணம் தவறு என்றும் நான் உறுதியாக நம்பினேன். ஆனால் என் யோசனை தவறாகிவிட்டது. நான் ஹாவை நம்புவதை விடுத்து, என் சொந்த எண்ணங்களை மட்டுமே நம்பினேன்," என்று ஹெம் கூறினான்.

பிறகு, திடீரென்று அவன் எழுந்து உட்கார்ந்தான்.

பழைய நம்பிக்கைகள். ஹா அதைப் பற்றித்தான் எழுதியிருந்தான். ஆனால், ஒரு 'நம்பிக்கை' என்றால் என்ன என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு ஹெம் ஒருபோதும் நேரம் ஒதுக்கியதே இல்லை.

நம்பிக்கை என்றால் என்ன என்பதை இப்போது தான் புரிந்து கொண்டிருந்ததாக ஹெம் நினைத்தான்.

அவன் தரையிலிருந்து கஷ்டப்பட்டு எழுந்து, கூர்மையான ஒரு கல்லை எடுத்து, தன்னுடைய சொந்தப் புதிய எண்ணத்தை ஹாவின் வாசகத்திற்குப் பக்கத்தில் எழுதினான். பிறகு, அந்த வாசகத்தைச் சுற்றி

ஹோப்பின் ஆப்பிள்களில் ஒன்றை அவன் வரைந்தான். அது தன்னுடைய எண்ணமே அன்றி ஹாவினுடையது அல்ல என்பதைத் தன் நினைவில் வைத்துக் கொள்ளுவதற்காக அவன் அந்த ஆப்பிளை வரைந்தான்.




நம்பிக்கை என்பது அதுதான். ஓர் எண்ணம். ஆனால் அது எவ்வளவு சக்திவாய்ந்ததாக இருக்கிறது என்று பாருங்கள்!

புதிய சீஸைத் தேடி அவன் ஹாவோடு ஏன் போகவில்லை? ஏனெனில், ஹா, விஷயங்களை வித்தியாசமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். ஹா பார்த்ததை ஹெம்மால் பார்க்க முடியவில்லை. அவனுடைய சொந்த

எண்ணங்கள் ‘ஸீ’ சீஸ் நிலையத்திலேயே அவனை இருத்திவிட்டன. ஏனெனில், அந்த எண்ணங்கள் உண்மை என்று அவன் நம்பினான்.

தான் இங்கேயே தொடர்ந்து தங்கியிருந்து விடாப்பிடியாகக் காத்திருந்தால் விஷயங்கள் மாறும் என்று அவன் நம்பியிருந்தான்.

வெற்றிக்கான வாய்ப்பு இல்லாத ஒரு வீண் முயற்சியை ஹா மேற்கொண்டிருந்ததாகவும், அவனைவிடத் தனக்கு அதிகமான விஷயங்கள் தெரியும் என்றும் ஹெம் நினைத்திருந்தான்.

அவன் தன்னுடைய கண்ணோட்டத்தைவிட்டு வெளியே வந்து அடுத்தவருடைய கண்ணோட்டத்தைப் பார்க்க முடியாதபடி அவனுடைய நம்பிக்கைகள் அவனை அவனுடைய கண்ணோட்டத்திற்குள்ளேயே கட்டிப் போட்டுவிட்டன. அதனால்தான் அவன் ஹாவோடு போகவில்லை.

திடீரென்று அவனுடைய கனவு அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. அவன் உண்மை என்று நம்பிய அவனுடைய பழைய எண்ணங்கள்தான் அந்த சன்னல்களில் இருந்த கம்பிகள். புதிர்ப்பாதைக்குள் அடியெடுத்து வைத்து அதை ஆய்வு செய்வதிலிருந்து அவனைத் தடுத்தது உண்மையில் அந்த எண்ணங்கள்தான்.

அவனுடைய நம்பிக்கைகள் அவனை ஒரு கைதியாக ஆக்கிச் சிறைப்படுத்தி வைத்திருந்தன!

ஹெம் ஒரு புதிய வாசகத்தை அந்தச் சுவர்மீது எழுதி, அதைச் சுற்றியும் ஒரு ஆப்பிளை வரைந்தான்.




'ஸீ' சீஸ் நிலையத்தின் அருகே தன்னுடைய வீட்டில் குறுக்கும் நெடுக்குமாக நடந்தபடி, தான் இன்னும் சற்றுப் பொறுத்திருந்தால் சீஸ் மீண்டும் அங்கே தோன்றும் என்றும், விஷயங்கள் பழைய நிலைக்குத் திரும்பிவிடும் என்றும் தான் சிந்தித்துக் கொண்டிருந்ததைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தான்.

அவன் நம்பிய இன்னோர் எண்ணம் அது, ஆனால் அதுவே அவனைச் சிறைப்படுத்திய இன்னொரு நம்பிக்கையாகவும் ஆகியிருந்தது!

அப்படியானால், எல்லா நம்பிக்கைகளும் அப்படிச் செய்தனவா?

தான் முதன்முதலாக ஹோப்பை சந்தித்த நாளைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தான். அன்று அவன் கண்விழித்தபோது, அவள் அவனுக்கு அருகே உட்கார்ந்திருந்தாள். பிறகு அவன் எழுந்து உட்கார்ந்தபோது, ஒரு ஆப்பிளை அவனிடம் நீட்டினாள். அதைச் சாப்பிட முதலில் அவன் பயந்தான், ஆனால் பிறகு அவளை நம்பி அதைச் சாப்பிட்டுவிட்டான். அவள் தன்னுடைய கடைசி ஆப்பிளை அவனுக்குக் கொடுத்திருந்தாள்! அவள் தனக்கு ஒரு நல்ல தோழியாக வாய்த்திருந்ததாக ஹெம் நினைத்தான்.

அந்த நம்பிக்கை தனக்கு மிகவும் உதவியதாக அவன் கருதினான்.

அவன் அந்தச் சுவரில் இன்னொரு குறிப்பை எழுதினான்:




" நாம் ஒரு புதிய நம்பிக்கையை முயற்சித்துப் பார்த்தால் என்ன?" என்று ஹோப் கேட்டதை அவன் நினைத்துப் பார்த்தான். அதற்கு அவன் என்ன பதிலளித்திருந்தான்? " ஒரு நம்பிக்கையை நம்மால் முயற்சித்துப் பார்க்க முடியாது. நம்பிக்கைகள் அப்படிச் செயல்படுவதில்லை!"

“ ஒருவேளை ஹோப் கூறியது சரியாக இருக்குமோ? ஒரு பழைய நம்பிக்கையை மாற்றி ஒரு புதிய நம்பிக்கையைத் தேர்ந்தெடுக்க முடியுமோ?” என்று அவன் நினைத்தான்.

ஏதேனும் ஒரு பழைய நம்பிக்கையை இப்போது அவன் நினைவுகூர முயற்சித்தான், ஆனால் எதுவும் அவனுடைய நினைவுக்கு வரவில்லை. இந்த ஒட்டுமொத்த ‘நம்பிக்கை’ விவகாரம் ஹெம்மைப் பொருத்தவரை ஒரு புதிய வகையான சிந்தனைமுறையாக இருந்தது. இது எப்படிச் செயல்பட்டது என்பது அவனுக்கு உறுதியாகத் தெரியவில்லை.

சுவரின்மீது தான் எழுதியிருந்த குறிப்புகளை அவன் ஏறிட்டுப் பார்த்தான். அவை ஒவ்வொன்றையும் சுற்றி அவன் ஒரு ஆப்பிளை வரைந்திருந்தான். ஹோப் முதன்முறையாக ஒரு ஆப்பிளை அவனிடம் கொடுத்து அதைச் சாப்பிடும்படி கூறியபோது, “ அது எதுவாக இருந்தாலும் சரி, அதை என்னால் சாப்பிட முடியாது. நான் சீஸை மட்டுமே சாப்பிடுவேன்,” என்று தான் கூறியிருந்ததை அவன் நினைவுபடுத்திப் பார்த்தான்.

அதுதான் அவனுடைய எண்ணமாக இருந்தது, அந்த எண்ணத்தை அவன் நம்பியிருந்தான். ஆனால் அந்த எண்ணம் உண்மையே அல்ல என்பது நிரூபணமாகியது! ஏனெனில், அவன் அந்த ஆப்பிளைச் சாப்பிட்டு முடித்தபோது மிகவும் தெம்பாக உணர்ந்தான். எனவே, சீஸ் மட்டுமே தன்னால் உண்ண முடிந்த ஒரே வகையான உணவு அல்ல என்பதை அவன் தெரிந்து கொண்டான்.

எனவே, இப்போது அவன் வேறு விதமாகச் சிந்தித்தான்.

ஹோப் என்ன கூறினாள்? “ நீ உன் மனத்தை மாற்றிக் கொள்ளுவாய் என்று நான் பந்தயம் கட்டுகிறேன்.” அவள் சரியாகத்தான் கூறியிருந்தாள். அவன் தன் மனத்தை மாற்றியிருந்தான்!

அவன் விரைவாக அந்தச் சுவரின்மீது இன்னொரு குறிப்பை எழுதினான்:




தான் தன்னுடைய முழு ஆற்றலையும் திரும்பப் பெற்றிருந்தது போன்ற உணர்வைத் தான் அனுபவித்ததை ஹெம் கவனித்தான். இது அவனை ஆச்சரியப்படுத்தியது.

கடந்தகாலத்தில், தன்னுடைய நம்பிக்கைகள் குறித்து யாரேனும் கேள்வி எழுப்பியபோது ஹெம்முக்கு அது பிடிக்கவில்லை. அவன் தன் மனத்தை மாற்றிக் கொள்ள மறுத்தான். அவனுடைய எண்ணமோ அல்லது அவன்

கூறிய எதுவோ உண்மையல்ல என்று யாரேனும் கூறினால், அது அவனுடைய மனத்தைக் காயப்படுத்தியது.

ஆனால் இப்போது, தன்னுடைய எண்ணம் தவறு என்பது குறித்துக் கோபமோ அல்லது வருத்தமோ கொள்ளுவதற்கு பதிலாக, தான் கண்டுபிடித்துக் கொண்டிருந்த உண்மைகள் குறித்து அவன் உற்சாகமடைந்தான்.

முன்பு தான் தன்னுடைய மனத்தை மாற்றிக் கொள்ள மறுத்ததற்குக் காரணம் தான் அச்சுறுத்தலுக்கு ஆளாகியிருந்ததாகத் தான் உணர்ந்ததுதான் என்பதை இப்போது அவன் புரிந்து கொண்டான். அவனுக்குத் தன்னுடைய நம்பிக்கைகள் பிடித்திருந்ததால் அவன் அவற்றை மாற்றிக் கொள்ள விரும்பவில்லை. அவைதான் தன்னை உருவாக்கியிருந்ததாக அவன் நினைத்திருந்தான்.

ஆனால் இப்போது, அது தவறு என்பதை அவனால் காண முடிந்தது. ஒரு வித்தியாசமான எண்ணத்தைத் தன்னால் தேர்ந்தெடுக்க முடியும் என்பதையும், ஒரு வித்தியாசமான நம்பிக்கையைத் தன்னால் தேர்ந்தெடுக்க முடியும் என்பதையும் அவன் உணர்ந்து கொண்டான்.

இதற்குப் பிறகும் தான் தானாகத்தான் இருந்தோம் என்பதையும், தான் வேறொருவனாக மாறியிருக்கவில்லை என்பதையும் அவன் உணர்ந்தான்!




ஹெம் குறுக்கும் நெடுக்குமாக நடந்தபடி இவ்வாறு சிந்தித்தான்: "நம்பிக்கை என்றால் என்ன என்பதையும், அது எவ்வளவு சக்தியை உள்ளடக்கியுள்ளது என்பதையும், ஒரு புதிய நம்பிக்கையை என்னால் சுலபமாகத் தேர்ந்தெடுக்க முடியும் என்பதையும் இப்போது நான் தெரிந்து கொண்டுள்ள நிலையில் . . . அடுத்து நான் என்ன செய்ய வேண்டும் என்பதுதான் உண்மையான கேள்வி."

அவன் தன்னுடைய நடையை நிறுத்திவிட்டு அப்படியே நின்றான்.

அவனுடைய கேள்விக்கான விடை வெளிப்படையானதாக இருந்தது. அவன் இந்தப் புதிய அறிவைப் பயன்படுத்தி அவர்களுடைய இலக்கை அடைந்தாக வேண்டும். அவன் அதிகமான சீஸையும் ஆப்பிள்களையும் கண்டுபிடித்தாக வேண்டும்.

ஆனால் பிரச்சனை என்னவென்றால், ஹெம்மும் ஹோப்பும் ஏற்கனவே எல்லாவற்றையுமே முயற்சித்துப் பார்த்திருந்தனர். பார்ப்பதற்கு இனி வேறு எந்த இடமும் இருக்கவில்லை. அதிகமான ஆப்பிள்களோ அல்லது சீஸோ எங்கும் காணப்படவில்லை. அதனால், என்ன செய்வதென்று தெரியாமல் அவர்கள் திகைத்து நின்றனர்.

அது சாத்தியமற்ற ஒரு தேடலாக இருந்தது. விஷயம் அப்படி இருந்தால், பிறகு முயற்சிப்பதில் உண்மையில் எந்த அர்த்தமும் இல்லை என்று அவன் நினைத்தான்.

ஆனால் . . . 'சாத்தியமற்றது' என்பதும் இன்னொரு நம்பிக்கையாக இருந்தால்? அதை அவனால் மாற்ற முடியுமா?

அவனுடைய உடலில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது.




“ சற்றுப் பொறு. நாம் கொஞ்சம் அறிவுபூர்வமாக சிந்திக்கலாம்,” என்று அவன் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

இந்த நம்பிக்கை விவகாரத்திற்கும் ஓர் எல்லை உண்டு, இல்லையா?

ஹெம் அந்த எண்ணத்தை ஒரு கணம் அப்படியே தன் மனத்தில் தக்க வைத்தான். பிறகு, அவன் ஆழமாக சுவாசித்துவிட்டு, அந்த எண்ணத்தை

விட்டுத்தள்ளினான். அது மாறத் தொடங்கியதுபோல அவன் உணர்ந்தான்!

அவன் தன் கையில் இருந்த கூர்மையான கல்லைப் பார்த்துவிட்டு, அதைக் கொண்டு மீண்டும் அந்தச் சுவர்மீது இன்னொரு குறிப்பை எழுதினான்:




பொழுந்து விடிந்து ஒருசில மணிநேரத்திற்குப் பிறகு ஹோப் அங்கு வந்தபோது, அவன் உட்கார்ந்து கொண்டு ஏதோ பாடலை

முணுமுணுத்தபடி தன்னுடைய ஷூக்களைப் பளிச்சூட்டிக் கொண்டிருந்தான்.

ஹெம்மின் இந்தப் புதிய அவதாரத்தை அவளால் நம்ப முடியவில்லை! முந்தைய நாள் மாலையில் அவள் அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டபோது, அவன் களைத்துப் போயும் தோல்வியுற்றும் எரிச்சலடைந்தும் இருந்தான். இப்போது, அடையாளம் காணப்பட முடியாத அளவுக்கு அவன் புத்துணர்ச்சி பெற்றிருந்தான்.

அங்கிருந்த சுவரின்மீது அவன் எழுதியிருந்த பல புதிய குறிப்புகளை அவள் பார்த்தாள். அவை ஒவ்வொன்றைச் சுற்றியும் ஒரு ஆப்பிள் வரையப்பட்டிருந்ததை அவள் கண்டாள்.

“ அற்புதம்! நீ மிகவும் மும்முரமாக இருந்திருக்கிறாய்போலத் தெரிகிறதே!” என்று அவள் கூறினாள்.

“ ஆமாம்,” என்று ஹெம் ஆமோதித்துத் தலையசைத்தான்.

“ என்ன நிகழ்ந்தது?” என்று அவள் கேட்டாள்.

அவன் அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, “ நான் என் மனத்தை மாற்றிக் கொண்டேன்,” என்று பதிலளித்தான்.

“ நல்ல விஷயம்தான்,” என்று கூறிய அவள், மீண்டும் அவனுடைய குறிப்புகளைப் பார்த்துவிட்டு, பிறகு அவனைப் பார்த்து, “ ஆனால், நீ எதைப் பற்றி உன் மனத்தை மாற்றிக் கொண்டுள்ளாய்?” என்று கேட்டாள்.

ஹெம் தன்னுடைய ஷூக்களைக் கீழே வைத்துவிட்டு மெதுவாக எழுந்தான் (கருவிகளைக் கொண்ட அந்தக் கனமான பையை அவன் எல்லா இடங்களுக்கும் இழுத்துக் கொண்டு அலைந்து திரிந்ததில் அவனுடைய உடல் இறுக்கமடைந்தும் புண்பட்டும் போயிருந்தது).

“ அதை நான் இன்னும் கண்டுபிடிக்கவில்லை,” என்று அவன் கூறினான்.

முன்பு தான் செய்து கொண்டிருந்தது பலனளிக்கவில்லை என்பதை ஹெம் அறிந்திருந்தான். அவன் முற்றிலும் வித்தியாசமாக எதையேனும் செய்ய வேண்டியிருந்தது. அதற்கு, விஷயங்களை அவன் முற்றிலும் வித்தியாசமாகப் பார்க்க வேண்டியிருந்தது. அவன் தன் மனத்தை மாற்றிக் கொண்டு ஒரு புதிய நம்பிக்கையைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது.

ஆனால் எந்த நம்பிக்கையைத் தேர்ந்தெடுப்பது? அது அவனுக்குத் தெரியவில்லை.

ஹோப் அவனுக்கு அருகே வந்து அமர்ந்தாள்.

" நான் உன்னிடம் ஒன்று கேட்கலாமா?" என்று அவள் கேட்டாள். (ஹெம் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்ததை அவள் பார்த்தாள். அவனுடைய கவனத்தைக் கலைக்க அவள் விரும்பவில்லை. ஆனாலும், அவள் இந்த விஷயத்தை அவனுடைய வாயிலிருந்து கேட்க வேண்டியிருந்தது.) "உன்னுடைய சீஸின் வரவு திடீரென்று நின்றுவிட்டதாக நீ கூறினாய், இல்லையா? என் ஆப்பிள்களைப்போலவா?" என்று அவள் கேட்டாள்.

" ஆமாம்," என்று ஹெம் பதிலளித்தான்.

" என் மனத்தில் ஒரு கேள்வி முளைத்துள்ளது. முன்பு, தினமும் புத்தம்புதிய சீஸ் தோன்றிக் கொண்டே இருந்தபோது, அது எங்கிருந்து வந்தது?" என்று அவள் கேட்டாள்.

ஹெம் மீண்டும் எரிச்சல் கொள்ளத் தொடங்கினான். ஹோப் ஏகப்பட்டக் கேள்விகள் கேட்டாள்! அந்த சீஸ் எங்கிருந்து வந்தால் என்ன? அது இப்போது காணாமல் போய்விட்டிருந்தது.

ஹெம் தன்னை சுதாரித்துக் கொண்டான்.

அவன் ஹோப்பை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, சற்றுமுன் அவள் கேட்டிருந்த கேள்வியைப் பற்றி யோசித்தான்.

அந்த சீஸ் எங்கிருந்து வந்தது?

அவன் இந்தக் கேள்வியை எப்போதேனும் கேட்டிருந்தானா? ஹா இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தானா? தானும் ஹாவும் சேர்ந்து சீஸைத் தேடிச் செல்லுவதிலும், அதைக் கண்டுபிடித்துச் சுவைத்து உட்கொள்ளுவதிலும் செலவிட்டிருந்த நேரத்தை அவன் நினைத்துப் பார்த்தான். இந்தக் கேள்வியைத் தாங்கள் ஒருமுறையாவது கேட்டிருந்தோமா என்று அவன் யோசித்தான்.

இல்லை, அவர்கள் அக்கேள்வியை ஒருபோதும் கேட்டிருக்கவில்லை. அதில் அவன் உறுதியாக இருந்தான்.

தன்னுடைய இதயம் வேகமாகத் துடித்ததை ஹெம் உணர்ந்தான். இந்தக் கேள்வி முக்கியமானது என்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டது, ஆனால் அதற்கான காரணம் அவனுக்குத் தெரியவில்லை.

அவன் ஹோப்பை மீண்டும் பார்த்தான். இப்போது அவனிடமிருந்து எரிச்சல் முற்றிலுமாகக் காணாமல் போயிருந்தது. "அந்த சீஸ் . . . எங்கிருந்து . . . வந்தது?" என்று அவன் தயங்கித் தயங்கி மெதுவாகக் கேட்டுவிட்டு, " இது மிகவும் நல்ல கேள்வி என்று நான் நினைக்கிறேன்," என்று கூறினான்.

ஹோப்பின் கண்களில் ஒரு மினுமினுப்பு ஏற்பட்டது. "அப்படியென்றால், அக்கேள்விக்கான விடையை நீ கண்டுபிடித்துவிட்டாய் என்று அர்த்தமா?" என்று அவள் கேட்டாள்.

" இல்லை, ஆனால் இது ஒரு நல்ல கேள்விபோலத் தோன்றுகிறது. இக்கேள்வியை நாம் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தால், ஒரு நல்ல விடையை நாம் கண்டுபிடிக்கக்கூடும்!" என்று ஹெம் பதிலளித்தான்.

அவர்கள் இருவரும் ஒரு கணம் மௌனமாக இருந்தனர்.

பிறகு ஹோப் ஹெம்மைப் பார்த்து இப்படிக் கூறினாள்:

" இந்தப் புதிர்ப்பாதைக்கு வெளியே என்ன இருக்கிறது என்று நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்."

ஹெம் அவளை உற்றுப் பார்த்தான். "புதிர்ப்பாதைக்கு வெளியே என்ன இருக்கிறது?" என்று அவன் கேட்டுவிட்டு, நம்ப முடியாதவனாகத் தன் தலையை அசைத்தபடி, " புதிர்ப்பாதைக்கு வெளியே எதுவும் இல்லை," என்று கூறினான்.

" ஓ!" என்று கூறிய ஹோப், ஒரு கணம் அமைதியாக இருந்துவிட்டு, பிறகு ஹெம்மைப் பார்த்து, " அது உனக்கு உறுதியாகத் தெரியுமா?" என்று கேட்டாள்.

" ஆமாம், எனக்கு உறுதியாகத் தெரியும்!" என்று ஹெம் கூறினான்.

அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துவிட்டு, ஒரே நேரத்தில் ஒரே மாதிரியான வார்த்தைகளை உதிர்த்தனர்:

" நீ நம்புகின்ற ஓர் எண்ணம் உண்மையானது!"

இன்னொரு நம்பிக்கை! இந்த வகையான நம்பிக்கைதான் தன்னை உயர்த்துவதற்கு பதிலாகத் தன்னைக் கீழே இழுத்துச் சாய்ந்தது என்று ஹெம் நினைத்தான்.

இந்த விஷயம் குறித்துத் தன்னால் தன் மனத்தை மாற்றிக் கொள்ள முடியுமா என்று அவன் யோசித்தான்.

ஹெம் தன் கண்களை மூடிக் கொண்டு, புதிர்ப்பாதைக்கு வெளியே ஓர் இடத்தைக் கற்பனை செய்ய முயற்சித்தான். ஆனால் அவனுடைய கற்பனையில் அந்தப் புதிர்ப்பாதையை மட்டுமே அவனால் பார்க்க முடிந்தது.

அவன் தன் கண்களைத் திறந்து, " இதில் பயனில்லை. என்னால் அதைக் கற்பனை செய்ய முடியவில்லை," என்று கூறிவிட்டு ஹோப்பைப் பார்த்து, " இந்தப் புதிர்ப்பாதையில் என்ன இருக்கிறதோ, அதை மட்டுமே என்னால் பார்க்க முடிகிறது. அதற்கு வெளியே எதையும் என்னால் என் மனத்தில் காட்சிப்படுத்த முடியவில்லை," என்று கூறினான்.

புதிர்ப்பாதை மட்டுமே ஹெம்முக்குத் தெரிந்த ஒரே விஷயம். அவன் தன் வாழ்நாள் முழுவதையும் அதில்தான் கழித்திருந்தான்.

ஹோப் ஏதோ சிந்தித்தபடி அவனைப் பார்த்தாள். பிறகு, " முதலில் நீ அதை நம்பினால் என்ன? பிறகு அதை உன்னால் பார்க்க முடியக்கூடும்," என்று அவள் கூறினாள்.

" அது . . . அது முட்டாள்தனமானது!" என்றுதான் ஹெம் கூற நினைத்தான். மாறாக, " அது . . . ஒரு நல்ல யோசனை," என்று அவன் கூறினான்.

தன்னால் நம்ப முடிகின்ற விஷயங்களுக்கு எந்த எல்லையும் இல்லை என்றால், அதை முயற்சித்துப் பார்த்தால்தான் என்ன என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அவன் தன் கண்களை மூடிக் கொண்டு மீண்டும் சிந்திக்கத் தொடங்கினான்:

இந்தப் புதிர்ப்பாதைக்கு வெளியே ஏதோ அற்புதமான ஒன்று இருக்கிறது.

ஹெம் ஆழமாக சுவாசித்துவிட்டு, அந்தப் புதிய எண்ணம் தன் மனம் முழுவதையும் ஆட்கொண்டதை உணர்ந்தான். அப்போது, தான் அதை நம்பத் தொடங்கியிருந்ததை அவன் உணர்ந்தான்.

அவன் தன் கண்களைத் திறந்து இன்னொரு குறிப்பை எழுதினான்:




அவன் ஹோப்பைப் பார்த்து, " வா, இந்தப் புதிர்ப்பாதைக்கு வெளியே என்ன இருக்கிறது என்று நாம் கண்டுபிடிக்கலாம்," என்று கூறினாள்.

இதைக் கேட்டுப் புன்னகைத்த அவள், " நீ சொல்லுவது சரியென்று எனக்குத் தோன்றுகிறது. உன்னுடைய சீஸ் எங்கேயிருந்து வருகிறது என்பதை நாம் கண்டுபிடிக்கக்கூடும்," என்று கூறினாள்.

அவன் இதைக் கேட்டு உற்சாகமடைந்து, அவள் கூறியதை ஆமோதித்துத் தலையசைத்தான். பிறகு, “ உன்னுடைய ஆப்பிள்களும் எங்கிருந்து வருகின்றன என்பதை நாம் கண்டுபிடிக்கலாம்!” என்று அவன் கூறினான்.

ஹோப் தரையிலிருந்து எழுந்து கொண்டு, “ சரி, அதை நாம் எப்படிச் செய்யப் போகிறோம்?” என்று கேட்டாள்.

“ அது பற்றி எனக்கு எந்த யோசனையும் இல்லை,” என்று ஹெம் கூறினான்.

உண்மையில் அவனுக்கு அது பற்றி எள்ளளவு யோசனைகூட இருக்கவில்லை. தாங்கள் எங்கே தேடப் போகிறோம் என்று அவன் யோசித்தான். ஆனால் அவனால் கற்பனை செய்ய முடியவில்லை. ஏனெனில், அவர்கள் ஏற்கனவே எல்லா இடங்களையும் ஆய்வு செய்திருந்தனர்.

தானும் ஹாவும் சீஸைத் தேடிச் சென்ற நாட்களை ஹெம் நினைவுகூர்ந்தான். இருண்ட மூலைகளையும் முட்டுச்சந்துகளையும் அவர்கள் எப்போதும் தவிர்த்தனர். அவன் இதை ஹோப்பிடம் விளக்கிவிட்டு, அவள் வேறொரு நல்ல கேள்வியைக் கேட்பாளா என்று தெரிந்து கொள்ளுவதற்காகக் காத்திருந்தான்.

அவன் எதிர்பார்த்தபடியே அவள் இன்னொரு கேள்வியை முன்வைத்தாள்.

“ அந்த இருண்ட மூலைகள் உண்மையிலேயே இருட்டானவை அல்ல என்றால் நீ என்ன செய்வாய்?” என்று அவள் கேட்டாள்.

“ அவை எப்படி இருட்டாக இல்லாமல் போகும்? அவை அப்படி இருப்பதால்தானே அவை இருண்ட மூலைகள் என்று அழைக்கப்படுகின்றன?” என்று ஹெம் கேட்டான்.

அங்கிருந்த சுவரின்மீது பொருத்தப்பட்டிருந்த ஒரு மெழுகுவர்த்தித் தாங்கியில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த ஒரு தடிமனான மெழுகுவர்த்தியை ஹோப் தன் கையிலெடுத்தாள். “நாம் நம்மோடு ஒரு மெழுகுவர்த்தியை எடுத்துச் சென்றால், அந்த இருண்ட மூலைகள் இருட்டாக இருக்காது,” என்று அவள் கூறினாள்.

ஹெம் எழுந்து அந்தத் தாழ்வாரம் வழியாக நடக்கத் தொடங்கியபோது, ஹோப் தன் இடத்தைவிட்டு அசைந்திருக்காததை கவனித்தான். அவள் அவனுடைய கருவிகள் அடங்கிய பையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

" நீ உன்னுடைய சுத்தியலையும் உளியையும் உன்னோடு எடுத்து வரப் போகிறாயா?" என்று அவள் கேட்டாள்.

ஹெம் அவற்றைப் பார்த்துவிட்டு, " இல்லை, நான் அவற்றை எடுத்து வரப் போவதில்லை," என்று கூறினான்.

ஹோப் இதைக் கேட்டுப் புன்னகைத்தாள். "அது சரியான செயல்தான். ஏனெனில், பழைய சுமைகளோடு ஒரு புதிய தேடலைத் துவக்குவது சரிப்பட்டு வராது," என்று அவள் கூறினாள்.

அவர்கள் ஏற்கனவே பல முறை ஆய்வு செய்திருந்த தாழ்வாரங்களுக்குள் அவர்கள் மீண்டும் சென்றனர். ஆனால் இம்முறை, இருண்ட மூலைகளைத் தவிர்ப்பதற்கு பதிலாக அவர்கள் அவற்றைத் தேடிச் சென்றனர். தான் எப்போதும் தவிர்த்து வந்திருந்த ஒன்றை இப்போது தான் தேடிக் கொண்டிருந்தது ஹெம்முக்கு விநோதமானதாகத் தோன்றியது. ஆனால், விநோதமாக உணருவது தங்களுடைய புதிய தேடலின் ஒரு பகுதியாக இருக்கக்கூடும் என்று அவன் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

விரைவில், மிக இருட்டான ஒரு மூலைக்கு அவர்கள் வந்து சேர்ந்தனர்.

அவர்கள் அந்த இருட்டுக்குள் நுழைந்தனர். ஹோப் தன்னுடைய மெழுகுவர்த்தியை உயர்த்திப் பிடித்து அச்சிறிய, குறுகலான பாதைக்கு வெளிச்சமூட்டினாள்.

ஹெம் மீண்டும் ஏமாற்றமடைந்தான். ஏனெனில், அந்தப் பாதையின் முடிவில் இருட்டும் ஒரு தட்டையான செங்கற்சுவரும் மட்டுமே இருந்ததை அந்த மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் அவன் கண்டான்.

" இன்னொரு முட்டுச்சந்து," என்று அவன் கூறினான்.

ஹோப் ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்ததுபோலத் தெரிந்தாள். "நானும் அதைத்தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், இது நாம் நம்பக்கூடாத ஓர் எண்ணமாக இருந்தால்?" என்று கேட்ட அவள், " எல்லா இருண்ட மூலைகளும் இருட்டானவை அல்ல. எல்லா

முட்டுச்சந்துகளும் உண்மையில் முட்டுச்சந்துகள் இல்லையோ என்னவோ!" என்று கூறினாள்.

ஹெம்முக்கு அந்த நினைப்புப் பிடித்திருந்தது. அந்த எண்ணத்தைத் தன் மனத்தில் நிலைப்படுத்தி, அது ஒரு நம்பிக்கையாக மாறும் அளவுக்குத் தன்னால் அதை நம்ப முடியுமா என்று பார்க்க அவன் தீர்மானித்தான்.

அவன் தன் கண்களை மூடிக் கொண்டு மீண்டும் ஒருமுறை தன்னுடைய கற்பனையைப் பயன்படுத்தினான். பல நீண்ட கணங்களுக்கு எதுவும் நிகழவில்லை. அவன் தன் முயற்சியைக் கைவிடவிருந்த நேரத்தில், தன் மனத்தில் ஏதோ ஒன்று பளிச்சிட்டதை அவன் கண்டான். அது வெளிச்சம்தான் என்று அவனால் உறுதியாகக் கூற முடியவில்லை என்றாலும், அது வெளிச்சத்திற்கான ஒரு சாத்தியக்கூறாக இருந்ததாக அவன் நினைத்தான். அவனுடைய இதயம் உற்சாகத்தில் துள்ளியது.

ஹெம் மீண்டும் தன் கண்களைத் திறந்து ஹோப்பைப் பார்த்தான்.

" நாம் இந்தப் பாதையை முயற்சித்துப் பார்க்கலாம்," என்று அவன் கூறினான்.

அவர்கள் இருவரும் மெதுவாக அப்பாதையில் நடந்தனர். இருவருமே பதற்றமாக இருந்தனர். ஒட்டுமொத்தப் புதிர்ப்பாதையும் ஓர் ஆபத்தான இடம் என்ற நினைப்பை ஹெம்மால் விட்டுத்தள்ள முடியவில்லை. அவன் ஒரு சிறுவனாக இருந்த சமயத்திலிருந்தே இந்தப் பாதையை அறிந்திருந்தான். இந்தப் புதிர்ப்பாதை ஓர் ஆபத்தான் இடம் . . . இந்த எண்ணம் தொடர்ந்து அவனுடைய மனத்தில் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

ஆனால் இந்த எண்ணம் பொய்யானதாக இருந்தால்? அவன் நம்பக்கூடாத ஓர் எண்ணமாக இருந்தால்?

அவன் தன் நடையை நிறுத்தினான். அவன் என்ன சொல்லவிருந்தான் என்று பார்ப்பதற்காக ஹோப்பும் நின்றாள்.

" நீ ஒன்றைச் சிந்திக்கின்ற ஒரே காரணத்தால் அதை நீ நம்ப வேண்டும் என்று அர்த்தமில்லை," என்று அவன் தனக்குள் முணுமுணுத்தான்.




ஹோப் எதுவும் கூறவில்லை. அவனுடைய மனத்தில் ஓடிக் கொண்டிருந்த எண்ணத்தை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

அவர்கள் தொடர்ந்து நடந்தனர். அவர்கள் அந்த இருண்ட மூலையை நெருங்கியபோது, அச்சிறிய பாதையின் முனையில் ஒரு சின்னஞ்சிறு வெளிச்சம் தெரிந்ததை ஹெம் கண்டான். அது அந்த மெழுகுவர்த்தியின்

வெளிச்சம்தான். ஒரு கதவின்மீது பொருத்தப்பட்டிருந்த ஒரு சிறிய சன்னலில் பட்டு அது பிரதிபலித்தது.

அவர்கள் அந்தக் கதவைத் திறந்து ஒரு சிறிய அறைக்குள் அடியெடுத்து வைத்தனர். அந்த அறை அவர்கள் ஏற்கனவே ஆய்வு செய்திருந்த வேறு பல அறைகளைப்போலவே இருந்தது. ஹோப்பின் மெழுகுவர்த்தி கொடுத்த மங்கலான வெளிச்சத்தில் அவர்கள் அந்த மங்கலான சிறிய அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தனர். நான்கு மூலைகளையும் நான்கு சுவர்களையும் தவிர அங்கு வேறு எதுவும் இருக்கவில்லை.

அது முற்றிலும் காலியாக இருந்தது.

ஹெம் ஏமாற்றத்துடன் அங்கிருந்து திரும்பிச் செல்ல முயன்றபோது, ஹோப் அங்கேயே நின்று கொண்டு அவனை கவனித்துக் கொண்டிருந்தாள். அவன் ஏதேனும் கூறுவதற்காக அவள் காத்துக் கொண்டிருந்ததுபோலத் தெரிந்தாள்.

“ என்ன? இங்கு எதுவும் இல்லை,” என்று அவன் கூறினான்.

“ பார்க்க அப்படித்தான் தெரிகிறது,” என்று கூறிய ஹோப், இன்னும் சிறிது நேரம் காத்திருந்தாள்.

எனவே, ஹெம் அதைப் பற்றி நினைத்துப் பார்த்துவிட்டு, தன்னைத் தானே ஒரு கேள்வி கேட்டுக் கொண்டான்:

எல்லா இருண்ட மூலைகளும் இருட்டானவை அல்ல என்றால், எல்லா முட்டுச்சந்துகளும் முட்டுச்சந்துகள் அல்ல என்றால், காலியான அறைகள் அனைத்தும் காலியானவையாக இருக்க வேண்டிய அவசியம் இல்லையல்லவா?

“ நாம் இந்த அறையை மீண்டும் ஒருமுறை பார்க்கலாமா?” என்று அவன் கேட்டான்.

ஹோப் புன்னகைத்துவிட்டு அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு, “ வா, நாம் இருவரும் சேர்ந்து பார்க்கலாம்,” என்று கூறினாள்.

அவர்கள் முதலாம் வெற்றுச் சுவரின் ஓரமாக நடந்து சென்று, அந்த மூலையில் திரும்பி இரண்டாவது வெற்றுச் சுவரின் ஓரமாக நடந்து சென்று, அந்த மூலையிலும் திரும்பி மூன்றாவது சுவரின் ஓரமாக நடந்து

சென்று கொண்டிருந்தபோது, பாதி வழியில் திடீரென்று அவர்கள் நின்றனர்.

“ அதை உன்னால் உணர முடிகிறதா?” என்று ஹெம் கிசுகிசுத்தான்.

“ ஆமாம்,” என்று ஹோப் பதிலுக்குக் கிசுகிசுத்தாள்.

குளிரான காற்று அவர்களுடைய கால்களை வருடிச் சென்றது. ஹெம் கீழே குனிந்து அதை முகர்ந்து பார்த்தான். புத்தம்புதியது போன்ற வாசனை அதிலிருந்து வந்தது.

அவர்கள் இருவரும் தங்கள் கைகளைத் தரையில் ஊன்றி மண்டியிட்டு அமர்ந்தனர். அந்தச் சுவரில் ஒரு குட்டிநபர் நுழைந்து செல்லப் போதுமான அளவில் ஒரு வழி இருந்தது.

ஹெம் ஹோப்பைப் பார்த்து, அவள் முதலில் அந்த வழியாகப் போவதற்கு அவளிடம் சைகை காட்டினான்.

ஹோப் அந்தப் பொந்துக்குள் தவழ்ந்து சென்றாள். ஹெம் அவளைப் பின்தொடர்ந்து சென்றான்.

அவர்கள் இருவரும் சிறிது நேரம் தொடர்ந்து தவழ்ந்து சென்று கொண்டே இருந்தனர். இறுதியில், அந்தப் பொந்தின் முடிவில் அவர்கள் ஒரு வெளிச்சத்தைக் காணத் தொடங்கினர்.

அந்த வெளிச்சம் மேன்மேலும் பிரகாசமடைந்து கொண்டே போனது . . . பிறகு- —

ஹோப்பும் ஹெம்மும் ஒரு பிரகாசமான வெளிச்சத்திற்குள் வந்து சேர்ந்தனர். முதலில் அவர்களால் எதையும் பார்க்க முடியாத அளவுக்கு அந்த வெளிச்சம் அவர்களுடைய கண்களைக் கூசச் செய்தது. அவர்கள் எழுந்து நின்று, கண்களைக் கசக்கி, தூய காற்றை சுவாசித்தனர்.

அவர்களுடைய கண்கள் அந்த வெளிச்சத்திற்குப் பழக்கப்பட்டவுடன், அவர்கள் சுற்றுமுற்றும் பார்த்தனர். ஒரு மெல்லிய குளிர்க்காற்று வீசிக் கொண்டிருந்த அழகான, பசுமையான ஒரு புல்வெளியில் அவர்கள் நின்று கொண்டிருந்தனர்.

ஹெம் இதுபோல எதையும் இதற்கு முன்பு பார்த்திருக்கவுமில்லை, அனுபவித்திருக்கவும் இல்லை. அவன் தன் தலையை உயர்த்திக் கூரையைப் பார்த்தான். அவன் அதைக் கூரை என்றுதான் நினைத்தான்!

அது நீல நிறத்தில் மிக உயரத்தில் இருந்தது! ஒளிமயமான ஒரு பொன்னிற விளக்கு அங்கு இருந்தது. அவன் அதுவரை பார்த்திராத மிகவும் பிரகாசமான மற்றும் கதகதப்பான விளக்கு அது. அதை நேரடியாகப் பார்க்க முடியாத அளவுக்கு அது மிகத் தீவிரமானதாக இருந்தது.

ஆச்சரியத்தில் அவன் வாயடைத்து நின்றான். அவன் ஆழமாக சுவாசித்துவிட்டுத் தன் கைகளைத் தன்னுடைய பாக்கெட்டுகளுக்குள் விட்டுக் கொண்டு, கண்களை மூடி, அந்தப் பிரகாசமான விளக்கின் கதகதப்பை உணருவதற்காகத் தன்னுடைய முகத்தை மேலே உயர்த்தினான்.

அவனுடைய விரல்களில் ஏதோ தட்டுப்பட்டது. அவன் அதை வெளியே இழுத்து அது என்னவென்று பார்த்தான். அது ஒரு காகிதத் துண்டு. அதன் உச்சத்தில் 'உண்மை நிலவரம்' என்று எழுதப்பட்டிருந்தது.

அவன் அதைப் படிக்கத் தொடங்கினான்.

பிறகு அவன் வாய்விட்டுச் சிரிக்கலானான்.

ஹோப் சற்றுக் குழப்பத்தோடு புன்னகைத்தாள். ஹெம் சிரித்து அவள் அதற்கு முன்பு ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. அவன் புன்னகைத்துக்கூடத் தான் பார்த்ததாக அவளுக்கு நினைவிருக்கவில்லை.

" அதில் என்ன எழுதப்பட்டிருக்கிறது?" என்று அவள் கேட்டாள்.

ஹெம் அந்தக் காகிதத்தை ஹோப்பிடம் காட்டினான்.

" நான் அதிகமான சீஸைக் கண்டுபிடிக்க வேண்டும், இல்லாவிட்டால் நான் இறந்துவிடுவேன் என்று அது கூறுகிறது," என்று அவன் கூறிவிட்டு ஹோப்பைப் பார்த்து, " ஆனால் நான் சீஸுக்கு பதிலாக ஆப்பிள்களைக் கண்டுபிடித்தேன், அவற்றைச் சாப்பிட்டேன். நான் இறக்கவுமில்லை," என்று கூறினான்.

ஹோப் அவனைப் பார்த்து, " இல்லை, நீ இறக்கவில்லை. நீ இறக்க மாட்டாய் என்று ஏற்கனவே எனக்குத் தெரியும்," என்று கூறினாள்.

" அந்தப் புதிர்ப்பாதையானது இருண்ட மூலைகளையும் முட்டுச்சந்துகளையும் உள்ளடக்கிய ஓர் ஆபத்தான இடம் என்றும் அது கூறுகிறது," என்று ஹெம் கூறினான்.

“ ஆனால் நம்மை இங்கு கொண்டு வந்து சேர்த்த முட்டுச்சந்துக்கு நம்மை இட்டு வந்தது ஓர் இருண்ட மூலைதான்,” என்று அவள் கூறினாள்.

“ இந்தக் காகிதத்தில் கடைசியாக, எல்லாம் என்னைப் பொருத்தது என்றும், நான் தனியாக எல்லாவற்றையும் சமாளித்தாக வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது,” என்று ஹெம் கூறினான்.

ஹோப் ஒரு புன்னகையுடன், “ அந்த ஒரு விஷயம் நிச்சயமாக உண்மையல்ல,” என்று கூறிவிட்டு, தான் கண்டெடுத்திருந்த ஒரு சீஸ் துண்டை அவனிடம் நீட்டினாள்.

அவன் அதை நன்றியோடு வாங்கி மென்று கொண்டே, “ ஆம், அந்த மூன்றாவது விஷயம் உண்மையல்ல,” என்று கூறினான்.

புதிர்ப்பாதைக்கு வெளியே இருந்த அப்புதிய உலகத்தை அவர்கள் ஆய்வு செய்தபோது, எல்லா இடங்களிலும் ஆப்பிள்களையும் சீஸையும் அவர்கள் கண்டனர்.

அவர்கள் அந்த ஆப்பிள்களையும் சீஸையும் சேர்த்துச் சாப்பிட்டுப் பார்த்தனர். அந்தக் கலவை மிகவும் சுவையாக இருந்தது.

அவ்வுலகில் அனைத்துமே பிரகாசமாக இருந்தன! புதிர்ப்பாதைக்கு உள்ளே எல்லா இடங்களும் எல்லாப் பொருட்களும் எவ்வளவு மங்கலாகவும் இருளடைந்தும் இருந்தன என்பதை அவர்கள் இப்போதுதான் முதன்முறையாக உணர்ந்தனர்.

அந்தப் புதிர்ப்பாதைக்குள் இருந்து வெளியே வந்தது தன்னுடைய பழைய நம்பிக்கைகள் எனும் சிறையிலிருந்து தான் வெளிவந்தது போன்ற ஓர் உணர்வை ஹெம்முக்குக் கொடுத்தது.

அந்தப் புதிர்ப்பாதை உண்மையிலேயே ஒரு சிறைதான்போலும் என்று அவன் நினைத்தான்.

ஒரு விஷயம் மட்டும் அவனுக்கு உறுதியாகத் தெரிந்தது: வெளியே இருந்த காற்று இனிய நறுமணத்தைக் கொண்டிருந்தது!

ஹெம் தன் கையிலிருந்த காகிதத்தை மீண்டும் பார்த்தான். “உண்மை நிலவரம்!” என்று கூறிவிட்டு அவன் மீண்டும் சிரித்தான். “அந்தச் சமயத்தில் அவை உண்மைபோலத் தோன்றின!”

“ ஆனால் அவை உண்மை அல்ல,” என்று ஹோப் கூறினாள்.

“ அவற்றில் ஒன்றுகூட உண்மையில்லை,” என்று ஹெம் ஆமோதித்தான்.

அவன் அந்தக் காகிதத்தின் மறுபக்கத்தில், கடந்த ஒருசில நாட்களின் ஊடாகத் தான் கண்டுபிடித்திருந்த விஷயங்களைச் சுருக்கமாகத் தொகுத்து எழுதினான்.

## புதிர்ப்பாதையிலிருந்து வெளியேறுவதற்கான வழி

**உங்களுடைய நம்பிக்கைகளை கவனியுங்கள்**

*ஒரு நம்பிக்கை என்பது நீங்கள் உண்மை
என்று நம்புகின்ற ஓர் எண்ணமே*

**நீங்கள் நினைக்கின்ற எல்லாவற்றையும் நம்பாதீர்கள்**

*சில சமயங்களில் 'உண்மைத் தகவல்கள்'
என்பவை விஷயங்களை நீங்கள் பார்க்கின்ற
விதமேயன்றி வேறொன்றும் இல்லை*

**எது பலனளிக்கவில்லையோ அதை விட்டுத்தள்ளுங்கள்**

*பழைய சுமைகளுடன் ஒரு புதிய தேடலை
உங்களால் துவக்க முடியாது*

**புதிர்ப்பாதைக்கு வெளியே பாருங்கள்**

*நிகழ வாய்ப்பில்லாததுபோலத் தோன்றுகின்ற
ஒன்றைக் கருத்தில் கொள்ளுங்கள் – சாத்தியமற்றதை
ஆய்வு செய்யுங்கள்*

**ஒரு புதிய நம்பிக்கையைத் தேர்ந்தெடுங்கள்**

*நீங்கள் சிந்திப்பவற்றை மாற்றுவது
உங்களை மாற்றுவதாகாது*

**உங்களால் நம்ப முடிகின்ற விஷயங்களுக்கு
எல்லைகளே இல்லை**

*நீங்கள் நினைப்பதைவிட அதிகமானவற்றை
உங்களால் செய்ய முடியும், அனுபவிக்க முடியும்,
ரசித்து மகிழ முடியும்*

அவர்கள் இருவரும் அந்தப் புல்லின்மீது அமர்ந்து, சூரிய வெளிச்சத்தையும் குளிர்ந்த காற்றையும் ரசித்து அனுபவித்தனர். ஹெம் தன்னுடைய நண்பன் ஹாவைப் பற்றி மீண்டும் நினைத்துப் பார்த்தான். அவன் தங்களோடு இருந்தால் அவன் இவற்றையெல்லாம் அதிகமாக ரசித்து மகிழுவான் என்று ஹெம் நினைத்தான்.

" நீ ஹாவைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறாய், இல்லையா?" என்று ஹோப் கேட்டாள்.

ஹெம் அதை ஆமோதித்துத் தலையசைத்தான். வழக்கம்போல, அவன் சிந்தித்துக் கொண்டிருந்ததை அவள் துல்லியமாக அறிந்து கொண்டாள். அவள் அதை எப்படிச் செய்தாள் என்று அவன் வியந்தான்.

" நாம் ஹாவைக் கண்டுபிடித்தாக வேண்டும். உன்னுடைய நண்பர்களான ஸ்னிஃப் மற்றும் ஸ்கரியையும் நாம் கண்டுபிடிக்க வேண்டும்," என்று அவள் கூறினாள்.

ஹெம் அவளைப் பார்த்து மீண்டும் தலையசைத்துவிட்டு, " நானும் துல்லியமாக அதைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்," என்று கூறினான்.

அவள் ஒரு புன்முறுவலோடு அவனைப் பார்த்து, " சரி, நாம் போகலாம்," என்று கூறினாள்.

அவர்கள் இருவரும் அங்கிருந்து எழுந்தபோது, ஹோப் ஹெம்மின் கையை மீண்டும் பற்றினாள். அப்போது திடீரென்று- —

" ஹெம்! ஹெம்!"

பரிச்சயமற்ற இந்த இடத்தில் யாரோ தன்னுடைய பெயரைச் சொல்லி அழைத்தது குறித்து ஆச்சரியமடைந்த ஹெம் திரும்பிப் பார்த்தபோது, தன்னை நோக்கி வேகமாக ஓடி வந்து கொண்டிருந்த உருவத்தைக் கண்டு வாயடைந்து நின்றான்.

அது அவனுடைய நண்பன் ஹா!

" நீ இங்கேயா இருக்கிறாய்?" என்று கேட்ட ஹா, ஹெம்மை ஆரத் தழுவிக் கொண்டு, தன்னுடைய இரண்டு கைகளாலும் அவனுடைய முதுகின்மீது குத்தினான்.

“ நீயும் இங்குதான் இருக்கிறாயா?” என்று கேட்ட ஹெம், சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, “ ஸ்னிஃபும் ஸ்கரியும் எங்கே?” என்று கேட்டான்.

ஹா இதைக் கேட்டுச் சிரித்தான். “உனக்குத்தான் அவற்றைப் பற்றி நன்றாகத் தெரியுமே. அவைதான் முதலில் அந்தப் புதிர்ப்பாதையைவிட்டுத் தப்பித்து வெளியே வந்தன. ஆனால், நீ . . . அந்தப் புதிர்ப்பாதையிலிருந்து வெளியே வருவதற்கான வழியை நீ ஒருபோதும் கண்டுபிடிக்காமல் இருந்துவிடுவாயோ என்று நான் கவலைப்பட்டேன்.”

“ நான் அந்த வழியைக் கிட்டத்தட்டத் தவறவிட்டுவிட்டேன்,” என்று ஒப்புக் கொண்ட ஹெம், “ நான் அந்தப் புதிர்ப்பாதையிலேயே மாட்டிக் கொண்டுவிட்டதாக நான் நினைத்தேன். நான் அங்கேயே இறந்துவிடுவேன் என்றுகூட நான் எண்ணினேன்,” என்று கூறிப் பெருமூச்செறிந்துவிட்டு, “ ஆனால் என் எண்ணம் தவறு என்பது இப்போது எனக்குப் புரிகிறது. ஆனால் அச்சமயத்தில் அந்தப் பொறியிலிருந்து விடுபடுவதற்கான வழியை என்னால் பார்க்க முடியவில்லை. நான் என்னுடைய பழைய நம்பிக்கைகளில் சிக்கிக் கிடந்தேன்,” என்று கூறினான்.

“ பிறகு என்ன நிகழ்ந்தது?” என்று ஹா அமைதியாகக் கேட்டான்.

ஹெம் ஒரு கணம் சிந்தித்தான்.

“ முதலில் நான் கோபப்பட்டேன். பிறகு எனக்குப் பசித்தது. அதன் பிறகு நான் ஹோப்பை சந்தித்தேன்,” என்று கூறிய ஹெம், ஹோப்பை நோக்கித் திரும்பி அவளைப் பார்த்துப் புன்னகைத்தான். “ஹோப், இது என்னுடைய- —”

“ ஹா, உங்களை சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி,” என்று கூறி ஹாவுடன் ஹோப் கைகுலுக்கினாள்.

“ எனக்கும் உங்களை சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி,” என்று கூறிய ஹா, ஒரு சிரிப்போடு அவளைப் பார்த்து லேசாகத் தலைவணங்கினான். பிறகு, அவன் ஹெம்மிடம், “ நீ ஹோப்பைக் கண்டுபிடித்தப் பிறகு என்ன நிகழ்ந்தது?” என்று கேட்டான்.

“ பிறகு, நான் என் மனத்தை மாற்றிக் கொண்டேன்!”

ஹா ஒரு கனிவான புன்னகையுடன் மீண்டும் ஹெம்மை ஆரத் தழுவிக் கொண்டான். “நண்பா, நான் எப்போதும் உன்னைக் குறித்து ஏங்கி

வந்துள்ளேன். நீ அந்தப் புதிர்ப்பாதையிலிருந்து வெளியேறியது குறித்து நான் மிகவும் மகிழுகிறேன். உன்னுடைய நம்பிக்கைகளை எப்படி மாற்றிக் கொள்ளுவது என்பதை நீயே கண்டுபிடித்திருப்பது குறித்து நான் அதிக மகிழ்ச்சி கொள்ளுகிறேன்," என்று ஹா கூறினான்.

" நம்பிக்கைகள் சக்திவாய்ந்த விஷயங்கள், இல்லையா?" என்று ஹெம் கேட்டான்.

நம்மைக் கீழே சாய்ப்பதற்கும் அல்லது மேலே உயர்த்துவதற்குமான அற்புதமான சக்தி நம்பிக்கைகளுக்கு இருப்பதைப் பற்றிச் சிந்தித்தபடி அம்மூவரும் அமைதியாக இருந்தனர். மேலும், நம்பிக்கைகளை நம்மால் மாற்ற முடியும், அப்படி மாற்றும்போது நீங்கள் சுயமாக எந்த மாற்றத்திற்கும் உட்படாமல் நீங்களாகவே இருக்க முடியும் என்ற தங்களுடைய அனுபவபூர்வமான கண்டுபிடிப்பைப் பற்றியும் அவர்கள் எண்ணிப் பார்த்தனர்.

ஹெம்முக்கு இன்னோர் எண்ணம் தோன்றியது. "ஒரு நிமிடம் பொறு!" என்று கூறிய அவன், தன் பாக்கெட்டுக்குள் கையைவிட்டு ஒரு ஆப்பிளை வெளியே எடுத்து ஹாவிடம் கொடுத்து, " நீ எப்போதேனும் இதைச் சாப்பிட்டிருக்கிறாயா?" என்று கேட்டான்.

" ஆப்பிள்கள்! எனக்கு ஆப்பிள்கள் மிகவும் பிடிக்கும்," என்று ஹா கூறினான்.

" சீஸோடு சேர்த்துச் சாப்பிடும்போது அவை இன்னும் அதிகச் சுவையாக இருக்கும்!" என்று நண்பர்கள் இருவரும் ஒருசேரக் கூறினர்.

" இன்னொரு விஷயம் தெரியுமா?" என்று ஹோப் கேட்டாள்.

ஹாவும் ஹெம்மும் திரும்பி அவளைப் பார்த்தனர்.

" சாப்பிடுவதற்கு இங்கு பல்வேறு வகையான சுவையான உணவு இருக்கிறது என்று நான் உறுதியாக நம்புகிறேன். முன்பு நாம் ஒருபோதும் நினைத்துப் பார்த்திராதவை, நாம் ஒருபோதும் கற்பனை செய்திராதவை இங்கு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது," என்று அவள் கூறினாள்.

ஹாவும் ஹெம்மும் ஒருவரையொருவர் பார்த்தனர்.

அது சாத்தியமா?

நிச்சயமாக சாத்தியம்தான்!

எனவே, அம்மூவரும் அவற்றைத் தேடிப் புறப்பட்டனர்.

**முடிவு . . .**

**அல்லது இது இன்னொரு தொடக்கமா ?**

## ஒரு கலந்துரையாடல்

டெனிஸ் தான் கூறிக் கொண்டிருந்த கதையை நிறைவு செய்தபோது, அவர் தன் பேச்சை நிறுத்திவிட்டு அந்த அறையைச் சுற்றிலும் பார்த்தார். எல்லோரும் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தனர். அவர் பொறுமையாகக் காத்திருந்தார்.

“ ஆஹா!” என்று அலெக்ஸ் கூறினார்.

டெனிஸ் அவரை நோக்கித் திரும்பி ஒரு புன்னகையோடு, “ ஆஹாவா? அதற்கு என்ன அர்த்தம்?” என்று கேட்டார்.

“ ஹெம் அந்தப் புதிர்ப்பாதையிலிருந்து வெற்றிகரமாக வெளியேறியது அவனுக்கு நல்லதுதானே!” என்று அலெக்ஸ் கூறினார்.

“ ‘ ஷாஷேங்க் ரிடெம்ஷன்’ என்ற ஆங்கிலத் திரைப்படத்தில் ஆன்டி டுஃப்ரேன் என்ற கதாபாத்திரம் தப்பித்ததைப்போல ஹெம் அந்தப் புதிர்ப்பாதையிலிருந்து தப்பிவிட்டான்!” என்று பென் கூறினார். மற்ற அனைவரும் இதைக் கேட்டுச் சிரித்தனர். அப்பயிற்சி வகுப்புகளின் வாயிலாக, அந்தக் குழுவில் எல்லோரையும் குதூகலப்படுத்துகின்ற ஒருவராக பென் மாறியிருந்தார்.

“ முன்பு எனக்கு வாய்த்திருந்த ஒரு மேலதிகாரி அவ்வளவு அதிர்ஷ்டம் செய்திருக்கவில்லை,” என்று புரூக் கூறினார்.

“ உண்மையாகவா? என்ன நிகழ்ந்தது?” என்று டெனிஸ் கேட்டார்.

“ நான் பத்திரிகையியல் கல்லூரியில் பட்டம் பெற்று வெளிவந்ததும், நகரச் செய்தித்தாள் நிறுவனம் ஒன்றில் வேலைக்குச் சேர்ந்தேன். நாங்கள் எங்கள் செய்தித்தாளை இணையத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்று எங்கள் பதிப்பாளரை யாராலும் ஒப்புக் கொள்ள வைக்க முடியவில்லை. செய்தித்தாள்களில் வரும் விளம்பரங்களிலிருந்து கிடைத்த வருமானம், எங்கள் நிறுவனத்தின் செலவுகளைச் சமாளிக்கப் போதுமானதாக இருக்கும் என்று அவர் நம்பினார். எங்கள் பத்திரிகையில் விளம்பரம் செய்த பெருநிறுவனங்கள் பத்திரிகைகளில் விளம்பரம் கொடுப்பதை விடுத்து இணையத்தில் விளம்பரம் கொடுக்கத் தொடங்கிய பிறகும்கூட எங்கள் பதிப்பாளர் தன் நிலையை மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கவில்லை. எங்களுடைய வாசகர்கள் அதிக எண்ணிக்கையில் இணையத்தில் நேரடியாகச் செய்திகளைப் படிப்பதைத் தேர்ந்தெடுத்தப்

பிறகும்கூட, சந்தா கட்டி எங்கள் பத்திரிகையைப் படித்த வாசகர்களின் எண்ணிக்கை மீண்டும் அதிகரிக்கும் என்று அவர் வலியுறுத்தினார். நான் அந்நிறுவனத்தில் சேர்ந்து ஓராண்டுக்குப் பிறகு அந்த ஒட்டுமொத்தப் பத்திரிகையும் இழுத்து மூடப்பட்டது."

" புதிர்ப்பாதையைவிட்டு வெளியே வருவதற்கான வழியை அது கண்டுபிடிக்கத் தவறிவிட்டது!" என்று அலெக்ஸ் முணுமுணுத்தார்.

" நம்பிக்கைகள் மிகவும் சக்திவாய்ந்த விஷயங்களாகும். விடாப்பிடியான தனியொரு நம்பிக்கையால் ஓர் ஒட்டுமொத்த நிறுவனத்தையும் இழுத்துக் கீழே சாய்த்துவிட முடியும். விஷயங்கள் இந்நாள்வரை எவ்வாறு இருந்து வந்துள்ளனவோ, அவை எப்போதும் அப்படியே இருக்கும் என்று மக்கள் நம்புகின்றனர். ஆனால் யதார்த்தத்தில் அவ்வாறு நிகழுவதில்லை," என்று டெனிஸ் கூறினார்.

" ' உங்களுக்குத் தெரியாத விஷயங்கள் உங்களுக்குப் பிரச்சனை ஏற்படுத்துவதில்லை. மாறாக, எது உங்களுக்கு உறுதியாகத் தெரியும் என்று நீங்கள் நம்புகிறீர்களோ, அந்த விஷயம் உண்மையாக இல்லாமல் போவதுதான் உங்களைப் பிரச்சனைக்கு உள்ளாக்குகிறது,' என்று மார்க் டுவெயின் கூறியது உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று பென் கூறினார்.

மீண்டும் எல்லோரும் கலகலவென்று சிரித்தனர்.

டெனிஸ் மீண்டும் புன்னகைத்துவிட்டு, " டுவெயின் வழக்கம்போலச் சரியாகக் கூறியுள்ளார். உங்களுக்கு நான் ஓர் எடுத்துக்காட்டைக் கூறுகிறேன். 1912 ம் ஆண்டில் டைட்டானிக் கப்பல் தன்னுடைய முதல் கடற்பயணத்தை மேற்கொண்டபோது, மக்கள் அக்கப்பலை இரண்டே இரண்டு வார்த்தைகளில் விவரித்தனர்," என்று கூறினார்.

" மூழ்க முடியாதது!" என்று புரூக் கூறினார்.

" சரியாகச் சொன்னீர்கள். மூழ்க முடியாதது! எல்லோரும் அப்படித்தான் நம்பினர். அவர்கள் அவ்வாறு நம்பியதால், உயிர்காப்புப் படகுகளைப் போதுமான எண்ணிக்கையில் அவர்கள் அந்தக் கப்பலில் ஏற்றவில்லை."

" ஆயிரத்து ஐநூறுக்கும் அதிகமான மக்கள் இறந்துவிட்டனர்," என்று புரூக் கூறினார்.

" இதற்கான ஒரே காரணம், உண்மை என்று மக்கள் நம்பிய ஓர் எண்ணம்தான்," என்று மியா கூறினார்.

“ ‘ உண்மை நிலவரம்’, ” என்று அலெக்ஸ் முணுமுணுத்தார்.

எல்லோரும் ஒரு கணம் அமைதியாக இருந்தனர்.

“ அடக் கடவுளே!” என்று பென் கூறினார்.

மியா தொடர்ந்தார். “எல்லா நம்பிக்கைகளுமே மோசமானவை என்ற உணர்வு எனக்கு ஏற்படத் தொடங்குகிறது. நம்மைப் பிரச்சனைக்கு உள்ளாக்குகின்ற குறுகிய கண்ணோட்டங்கள் அவை. ஆனால் அவை உண்மையாக இருக்க முடியாது. ஹெம் கண்டுபிடித்த சில நம்பிக்கைகள் அவனுக்கு உதவத்தானே செய்தன?” என்று அவர் கேட்டார்.

“ நிச்சயமாக. எல்லா நம்பிக்கைகளையும் ஆராய்வது நல்லது. நீங்கள் உங்களுடைய நம்பிக்கைகளை கவனிப்பதும் அவற்றை ஆய்வு செய்வதும்தான் முக்கியம். அவற்றை நீங்கள் அப்படியே புறக்கணிக்க வேண்டியதில்லை,” என்று டெனிஸ் கூறினார்.

அவர் தொடர்ந்து, “ சில நம்பிக்கைகள் நம்முடைய வழியில் குறுக்கிட்டு, நாம் நம்மால் இயன்ற அளவுக்குச் சிறப்புறுவதிலிருந்து நம்மைத் தடுக்கின்றன. அல்லது, அவை நமக்குள்ளேயே முரண்பாடுகளைத் தோற்றுவிக்கின்றன. ஆனால் சில நம்பிக்கைகள் மிகவும் சக்திவாய்ந்த உண்மைகளாக இருக்கின்றன. கடினமான காலகட்டங்களில்கூட நமக்கு நன்னம்பிக்கையையும் உற்சாகத்தையும் கொடுத்து நாம் முன்னோக்கிச் செல்ல நமக்கு உதவுகின்ற ஒளியாக அவை திகழுகின்றன,” என்று கூறினார்.

“ எல்லா மனிதர்களும் சமமானவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர் என்ற யோசனையை அதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். உயிர்வாழுவதற்கும் விடுதலைக்கும் மகிழ்ச்சியைத் தேடிச் செல்லுவதற்குமான மறுக்கப்பட முடியாத உரிமைகளை நம்மைப் படைத்தக் கடவுள் நமக்குக் கொடுத்திருக்கிறார் என்று அந்த யோசனை கூறுகிறது,” என்று பென் குறிப்பிட்டார்.

“ ஹோப் ஒரு நல்ல தோழி என்ற ஹெம்மின் நம்பிக்கை அப்படிப்பட்ட ஒன்றுதான்,” என்று புரூக் கூறினார்.

“ நாம் நம்முடைய குழந்தைகள்மீது நம்பிக்கை கொள்ளுவதும் அப்படிப்பட்டதுதான்,” என்று மியா கூறினார்.

“ நீங்கள் உங்கள்மீது நம்பிக்கை கொள்ளுவதுகூட உங்களுக்கு உத்வேகமூட்டி உங்களை முன்னோக்கி வழிநடத்திச் செல்லுகிறது. நீங்கள் ஏதோ ஒரு காரணத்திற்காக இவ்வுலகில் படைக்கப்பட்டிருக்கிறீர்கள், இவ்வுலகிற்கு வழங்குவதற்கென்று ஏதோ தனித்துவமான மதிப்புவாய்ந்த ஒரு விஷயம் உங்களிடம் இருக்கிறது என்ற யோசனையை நம்புவது அது. எடுத்துக்காட்டாக: மியா, நீங்கள் ஏன் ஒரு மருத்துவராக ஆனீர்கள்?” என்று டெனிஸ் கேட்டார்.

மியா சற்றும் தயங்காமல், “ மக்கள் நோய்களால் துன்புறுவதிலிருந்து அவர்களை விடுவிடுப்பதற்காக,” என்று கூறினார்.

டெனிஸ் அக்குழுவினரிடம் திரும்பி, “ மக்களை நோயிலிருந்து குணப்படுத்துவதற்கான அந்த ஆழ்விருப்பம் அவர் உண்மை என்று நம்புகின்ற வெறும் எண்ணம் அல்ல என்பதை உங்களால் பார்க்க முடிகிறதா? அதுதான் அவருடைய ஒட்டுமொத்தச் சாரம். எழுத்தில் உண்மையையும் உன்னதத்தையும் கண்டுபிடிக்க புரூக் கொண்டுள்ள ஆழ்விருப்பத்தைப்போல! இவையெல்லாம் மைய விழுமியங்கள். ஒருபோதும் மாறாத உண்மைகள் இவை,” என்று கூறினார்.

“ ஐயோவென்று இடிந்து போய் உட்கார்ந்துவிடுவதைத் தவிர மற்ற எல்லாம் கைகொடுக்கும்,” என்று பென் கூறினார்.

“ அதுவும் உண்மைதான்,” என்று ஒப்புக் கொண்ட டெனிஸ், “ அங்குதான் ஹெம் சிக்கிக் கொண்டார். சூழல்கள் மாறுகின்றன. உலகம் மாறுகிறது. நேற்றுவரை உண்மையாக இருந்து வந்திருந்த விஷயங்கள் திடீரென்று இன்று உண்மையற்றவையாக மாறிவிடுகின்றன,” என்று கூறினார்.

அவர் மேலும் தொடர்ந்தார். “மக்கள் இனி எப்போதும் வீடியோக்களில்தான் திரைப்படங்களைப் பார்ப்பர் என்று ‘பிளாக்பஸ்டர் வீடியோ’ நிறுவனம் உறுதியாக நம்பியது. மக்கள் எப்போதும் தங்களுடைய புகைப்படங்களை “போட்டோ காகிதங்களில்தான்’ பார்க்க விரும்புவர் என்று போலராய்டு நிறுவனம் உறுதியாக நம்பியது. 1990 களின் துவக்கத்தில் செயல்பட்டு வந்த புத்தகக் கடைகளின் உரிமையாளர்கள், இணையத்தில் புத்தக விற்பனை ஒருபோதும் எடுபடாது என்று உறுதியாக நம்பினர்.

“ அவர்கள் அனைவரும் தங்களுடைய எதிர்காலத்தை எந்த நம்பிக்கைகளின் அடிப்படையில் திட்டமிட்டிருந்தனரோ, அந்த

நம்பிக்கைகள் உண்மையற்றவையாக ஆயின. அவை அவர்களை ஒரேயடியாக மூழ்கடித்துவிட்டன."

" டைட்டானிக் கப்பலைப்போல," என்று பென் கூறினார்.

" ஆமாம், டைட்டானிக் கப்பலைப்போல," என்று டெனிஸ் உடன்பட்டார்.

அவர் அந்த வகுப்பை நோட்டமிட்டபோது, பின்வரிசையில் அமைதியாக அமர்ந்திருந்த இளைஞர் சற்றுக் கவலையோடு காணப்பட்டதைக் கண்டார்.

" டிம், நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?" என்று டெனிஸ் கேட்டார்.

எல்லோருடைய கண்களும் டிம்மை நோக்கித் திரும்பின. "ஹெம் என்னவானான்?" என்று கேட்டு ஒரு வாரத்திற்கு முன்பு இந்த ஒட்டுமொத்த விவாதத்தையும் துவக்கி வைத்திருந்தது அவர்தான்.

" ஆமாம்," என்று கூறிய டிம், " என்னுடைய வேலையில் எந்தப் பிரச்சனையும் இல்லை. இது ஒரு தனிப்பட்ட விஷயம்," என்றார்.

" எங்களோடு பகிர்ந்து கொள்ளுவதில் உங்களுக்குத் தயக்கம் இல்லை என்றால், நீங்கள் அதைப் பற்றிப் பேசலாம்," என்று டெனிஸ் அமைதியாக கூறினார்.

" நிச்சயமாக. என்னுடைய பெற்றோர் பிரியவிருந்தனர் என்பதை இந்த ஆண்டின் துவக்கத்தில் நான் கண்டுபிடித்தேன். உண்மையைக் கூற வேண்டுமென்றால், அவர்கள் ஏற்கனவே பிரிந்துவிட்டனர்," என்று டிம் கூறினார்.

எல்லோரும் இப்போது டெனிஸைப் பார்த்தனர். "இது உங்களுக்கு மிகக் கடினமாக இருந்து வந்துள்ளது, இல்லையா?" என்று டெனிஸ் கேட்டார்.

" கடினமா? என்னால் எதுவுமே செய்ய முடியவில்லை. என் வாழ்நாள் நெடுகிலும் அவர்கள்தான் என்னுடைய நிரந்தரமான அடித்தளமாக இருந்து வந்தனர். என்னுடைய உலகில் இருந்த ஒரே நிச்சயமான விஷயம் அவர்கள்தான். அவர்களே தங்கள் முயற்சியைக் கைவிட்டுவிட்டனர்!"

“ நீங்கள் அது குறித்துக் கோபம் கொண்டுள்ளதுபோலத் தெரிகிறது,” என்று டெனிஸ் கூறினார்.

“ நான் கோபத்தில் உள்ளூரக் குமுறிக் கொண்டிருக்கிறேன். நான் இன்னும் அவர்களை நேசிக்கிறேன், ஆனால் இக்கணத்தில் நான் அவர்களை ஒரு விதத்தில் வெறுக்கவும் செய்கிறேன். அவர்கள் செய்து கொண்டிருப்பதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. என்னுடைய குழந்தைப்பருவத்தைப் பற்றி அது என்ன கூறுகிறது? என் குழந்தைப்பருவம் முழுவதும் ஒரு பொய்யா?” என்று டிம் கேட்டார்.

“ மக்கள் மாறுவது இயல்புதானே?” என்று டெனிஸ் கேட்டார்.

டிம் அதை மறுக்கும் விதமாகத் தலையசைத்து, “ இதுபோல மாறுவதில்லை,” என்று கூறினார்.

டெனிஸ் அதைப் பற்றிச் சிறிது நேரம் சிந்தித்துவிட்டு, “ இச்சூழ்நிலையை அவர்கள் எப்படிப் பார்ப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள்?” என்று கேட்டார்.

அந்த எண்ணம் டிம்மை திடுக்கிடச் செய்தது. “அதைப் பற்றி எனக்கு எந்த யோசனையும் இல்லை.”

“ அவர்கள் என்ன கூறுகின்றனர்?”

“ தங்களால் இயன்ற அளவுக்குச் சிறப்பாக முயற்சித்துப் பார்த்துவிட்டதாகவும், இதுதான் தங்களுக்குச் சரியான தீர்மானம் என்றும், காலப்போக்கில் நான் அதை ஏற்றுக் கொண்டுவிடுவேன் என்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆனால் அதில் எனக்குத் துளிகூட நம்பிக்கையில்லை.”

டெனிஸ் ஒருசில கணங்கள் மௌனமாக இருந்துவிட்டு, பிறகு, “ நீங்கள் வித்தியாசமாக நம்ப முயற்சி செய்தால் என்ன?” என்று கேட்டார்.

“ அது சரிப்பட்டு வராது!” என்று டிம் கோபத்தோடு கூறினார். அந்த அறையில் ஒரு கனத்த மௌனம் நிலவியது. பிறகு அவர் டெனிஸைப் பார்த்து, “ ஹெம்மும் துல்லியமாக இதைத்தானே கூறினான்?” என்று கேட்டபோது அவருடைய உதடுகளில் ஒரு லேசான புன்னகை அரும்பியது.

பதிலுக்கு டெனிஸ் அவரைப் பார்த்து ஒரு புன்முறுவலோடு, “ முற்றிலும் சரி,” என்று கூறினார்.

“ அப்படியானால் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? அவர்கள் சரியான தீர்மானத்தைத்தான் எடுத்திருக்கிறார்கள் என்கிறீர்களா? அவர்கள் இருவரும் சேர்ந்து இருந்து, தங்களுக்கிடையேயான பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முயற்சிப்பது சரியான தீர்மானமாக இருக்காது என்பது உங்கள் கருத்தா?” என்று அவர் கேட்டார்.

“ அதில் நான் தலையிட முடியாது. ஆனால், ஒரு நம்பிக்கையைப் பார்க்கும்போது, நான் ஹெம்மின் கேள்வியைப் பயன்படுத்த விரும்புகிறேன்: அது உங்களுக்கு உற்சாகத்தையும் உத்வேகத்தையும் கொடுக்கிறதா அல்லது உங்களை இழுத்துக் கீழே சாய்க்கிறதா? அது உங்களை உங்களுடைய புதிர்ப்பாதையிலிருந்து வெளியே அழைத்து வருகிறதா அல்லது நீங்கள் அதற்குள்ளேயே தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்கும்படி செய்கிறதா?”

டிம் குனிந்து தன்னுடைய மேசையைப் பார்த்தபடி ஆழமாக சிந்திக்கலானார்.

டெனிஸ் அவரிடம், “ டிம், ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் சிந்திப்பவற்றை மாற்றுவது உங்களை மாற்றப் போவதில்லை,” என்று கூறினார்.

டிம் அவரை ஏறிட்டுப் பார்த்து அவருடைய கண்களை உற்று நோக்கி, “ சரி, நான் அதைப் பற்றிச் சிந்திக்கிறேன்,” என்று கூறிவிட்டு ஒரு கணம் மௌனம் சாதித்தார். பிறகு, “ நான் ஹெம்மின் சுரங்கப் பாதை வழியாகத் தவழ்ந்து சென்று, அதன் முடிவில் ஏதேனும் பிரகாசமான வெளிச்சம் இருக்கிறதா என்று பார்க்கிறேன்,” என்று கூறினார்.

டெனிஸ் ஒரு வெற்றிப் புன்னகையை உதிர்த்துவிட்டு, “ அற்புதமான தீர்மானம்!” என்று கூறினார். பிறகு, அவர் அங்கிருந்த சுவர்க்கடிகாரத்தை ஏறிட்டுப் பார்த்தார். வகுப்பு முடிவடையும் நேரம் நெருங்கியிருந்தது.

“ ஒரே நேரத்தில் ஏகப்பட்ட மாற்றங்கள் நிகழும்போது அது எவ்வளவு குழப்பமூட்டுவதாக இருக்கும் என்பதைப் பற்றிக் கடந்த வாரம் நாம் விவாதித்தோம். அதை நான் இப்போது சுருக்கமாகத் தொகுத்துக் கூறுகிறேன். ஆனால் உங்களில் சிலர், ‘ எங்கிருந்து துவக்குவது?’ என்ற ஓர் அற்புதமான கேள்வியைக் கேட்டீர்கள், இல்லையா?” என்று அவர் கூறினார்.

பிறகு அவர் அந்த அறையைச் சுற்றிலும் பார்த்தார். “அலெக்ஸ்?”

கடந்த வாரம் எக்கச்சக்கமாகப் பேசிக் கொண்டிருந்த அலெக்ஸ், டெனிஸ் இந்தப் புதிய கதையைக் கூறி முடித்ததிலிருந்து கிட்டத்தட்ட மௌனமாக இருந்திருந்ததை மற்றவர்கள் அப்போதுதான் உணர்ந்தனர்.

அலெக்ஸ் நீண்டநேரம் சிந்தித்துவிட்டு, பிறகு மெதுவாகப் பேசத் தொடங்கினார்.

" மாற்றம் என்னிடமிருந்து தொடங்குகிறது என்று எனக்குத் தோன்றுகிறது," என்று கூறினார்.

" தொடர்ந்து பேசுங்கள்," என்று டெனிஸ் சைகையால் உணர்த்தினார்.

" நான் என்னுடைய பிரச்சனைகள்மீதே என் கவனம் முழுவதையும் செலுத்தி வந்துள்ளேன். மாறிக் கொண்டிருக்கின்ற என்னுடைய தொழிற்துறையில், எல்லாம் குழப்பமூட்டுவதாக இருக்கிறது, மாற்றத்திற்கு ஈடு கொடுத்துச் செல்லுவது மிகக் கடினமாக இருக்கிறது, அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதைக் கண்டுபிடிப்பதும் சவாலானதாக இருக்கிறது," என்று அலெக்ஸ் கூறினார்.

புரூக் தன்னுடைய குறிப்பேட்டை அலசிவிட்டு, " அலெக்ஸ், உங்களால் முடிந்தால் சீஸோடு சேர்ந்து நீங்களும் நகரப் போவதாக நீங்கள் கூறினீர்கள். ஆனால், சீஸ் எங்கே போயிற்று என்று பாதி நேரம் நீங்கள் அறிந்திருப்பதே இல்லை," என்று கூறினார்.

" நீங்கள் கூறுவது முற்றிலும் சரி. ஹெம்மும் துல்லியமாக அதைத்தான் செய்ய முயற்சித்துக் கொண்டிருந்தான், இல்லையா? தீர்வைத் தேடி அவன் அந்தப் புதிர்ப்பாதை நெடுகிலும் அலைந்து திரிந்தான். ஆனால் அவன் துவக்க வேண்டிய இடம் அந்தப் புதிர்ப்பாதையில் இருக்கவில்லை. அது அவனுடைய சொந்தத் தலையில்தான் இருந்தது," என்று அலெக்ஸ் கூறினார்.

அவர் மேலும், " ' புதிர்ப்பாதையிலிருந்து வெளியேறுங்கள்' என்று நீங்கள் கூறியபோது, நான் சிக்கிக் கிடக்கின்ற புதிர்ப்பாதை என்னுடைய வேலையோ, என்னுடைய நிறுவனமோ, அல்லது என்னுடைய தொழிற்துறையோகூட அல்ல, மாறாக என்னுடைய சொந்த அணுகுமுறைதான் என்பதை நான் புரிந்து கொண்டேன். நான் எந்தப் புதிர்ப்பாதையிலிருந்து விடுபட வேண்டும்? என் சொந்தச் சிந்தனைதான் அது என்று நான் நினைக்கிறேன்," என்று கூறினார்.

“ பழைய நம்பிக்கைகள் சிலவற்றை விட்டுத்தள்ளுவதற்கான நேரம் வந்துவிட்டதோ என்னவோ,” என்று புரூக் கூறினார்.

“ பழைய நம்பிக்கைகளில் சிலவற்றை விட்டொழிக்க மட்டுமன்றி, சில புதிய நம்பிக்கைகளைத் தேர்ந்தெடுப்பதற்கான நேரமும் வந்துவிட்டது,” என்று அலெக்ஸ் பதிலளித்தார்.

பென் சிரித்துக் கொண்டே, “ அதைப் பற்றி ஹெம் என்ன நினைத்தான் என்பதை மறந்துவிடாதீர்கள். புதிர்ப்பாதைக்கு வெளியே அற்புதமான ஏதோ ஒன்று இருக்கிறது!” என்று கூறினார்.

அந்த ஒட்டுமொத்தக் குழுவினரும் மீண்டும் சிரித்தனர். பிறகு பென்னைப் பாராட்டும் விதமாக எல்லோரும் உற்சாகமாகக் கைதட்டினர். பென் எழுந்து நின்று அவர்கள் முன்னால் பணிவோடு குனிந்து அந்தப் பாராட்டை ஏற்றுக் கொண்டார்.

நிறைவாக டெனிஸ் பேசினார். “பென், நீங்கள் சரியாகச் சொன்னீர்கள். நீங்கள் நம்பத் தொடங்கும்போது, புதிய சாத்தியக்கூறுகளை உள்ளடக்கிய ஓர் உலகம் உங்களுக்காகத் தன் கதவுகளைத் திறக்கிறது. அது மிக அற்புதமான ஒரு விஷயம்.

“ நம்முடைய பயிலரங்கு இத்துடன் நிறைவுக்கு வருகிறது. இங்கு நடைபெற்ற அற்புதமான விவாதத்திற்காக நான் உங்கள் எல்லோருக்கும் நன்றி கூற விரும்புகிறேன். உங்கள் தொழில்வாழ்க்கையிலும் உங்கள் தனிப்பட்ட வாழ்க்கையிலும் நீங்கள் எல்லோரும் சிறப்புற வேண்டும் என்று நான் வாழ்த்துகிறேன்.

“ நிறைவாக, நான் ஒரே ஒரு விஷயத்தை உங்களிடம் கூறிக் கொள்ள விரும்புகிறேன்: இச்சிறிய கதையிலிருந்து மதிப்பான ஏதோ ஒன்றை நீங்கள் பெற்றுள்ளதாக நீங்கள் நினைத்தால் . . .

**அதை**

**மற்றவர்களுடன்**

**பகிர்ந்து**

**கொள்ளுங்கள்**

## என் புற்றுநோய்க்கு ஒரு மடல்: ஸ்பென்சர் ஜானசன்

பின்வரும் கடிதம், ஸ்பென்சர் ஜான்சன் தன்னுடைய நோயின் இறுதிக் கட்டத்தில் இருந்தபோது எழுதியது. இப்புத்தகத்தில் இடம்பெற்றுள்ள கொள்கைகளை அவர் எந்த அளவுக்குத் தன் சொந்த வாழ்வில் கடைபிடித்தார் என்பதை இக்கடிதம் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

# என் புற்றுநோய்க்கு ஒரு மடல்

என்னருமைப் புற்றுநோயே,

நான் இப்போது உன்னை நேசிக்கிறேன்! ஒரு காலத்தில் நான் உன்னைக் கண்டு பயந்தேன், உன்னை வீழ்த்திவிட முடியும் என்ற நினைப்பில் உன்னை எதிர்த்துச் சண்டையிட்டேன். பிறகு நான் உன்னைப் பற்றிக் கொண்டிருந்த கண்ணோட்டங்களை நான் ஆய்வு செய்தேன். அவை நான் நேசித்தவற்றைப் பற்றியவையா அல்லது நான் பயந்தவற்றைப் பற்றியவையா என்று நான் தெரிந்து கொள்ள விரும்பினேன்.

அவை நான் பயந்தவற்றைப் பற்றியவையாகவே இருந்தன.

உன்னை நேசிக்கக் கற்றுக் கொள்ளுவது என்பது எனக்கு ஒரு விநோதமான யோசனையாகத் தோன்றியது, ஆனால் நான் அதைக் கற்றுக் கொண்ட விதத்தை நான் பெரிதும் விரும்புகிறேன். உன்னை நேசிக்கத் தொடங்கியதன் விளைவாக என் வாழ்க்கை அதிகச் செழிப்பானதாக ஆகியுள்ளது. ஏனெனில், நான் நோய்வாய்ப்பட்டு இருக்கின்ற இந்நேரத்தில், நான் விரைவில் இறக்கக்கூடும் என்று நான் உணருகின்ற இந்நேரத்தில், வாழ்க்கையை அதிகமாக மெச்சுகின்ற ஒருவனாகவும் ஓர் அன்பான நபராகவும் நான் ஆகியுள்ளேன், என் குடும்பத்தினருடனும் நண்பர்களுடனும் அதிக நெருக்கத்தை வளர்த்துக் கொண்டுள்ளேன். நான் ஒரு குறிக்கோளுடன் இயங்கிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய ஆன்மிகப் பயணத்தையும் நான் துரிதப்படுத்தியுள்ளேன்.

எனவே, உனக்கு மிக்க நன்றி! நன்றி! நன்றி!

- ஸ்பென்சர் ஜான்சன், எம்.டி.

## பின்னுரை: கென் பிளான்சார்டு, பிஎச்.டி.

‘புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்’ என்ற இந்நூலை நீங்கள் படித்து முடித்துள்ள நிலையில், உங்களுடைய நம்பிக்கைகளின் சக்தியையும், அவை உங்களுடைய நடத்தையின்மீதும் நீங்கள் பெறுகின்ற விளைவுகள்மீதும் ஏற்படுத்தக்கூடிய தாக்கத்தையும் நீங்கள் உணர்ந்திருப்பீர்கள் என்று நான் நம்புகிறேன். அதே நேரத்தில், பின்வரும் கேள்வி உங்கள் மனத்தில் எழக்கூடும்: “உங்களுடைய நம்பிக்கைகளைத் தேர்ந்தெடுப்பதன் சக்தியைப் பற்றி ஸ்பென்சர் ஜான்சன் எழுதியதோடு நிறுத்திக் கொண்டாரா அல்லது அக்கொள்கையை அவர் தன் வாழ்வில் கடைபிடித்து வாழ்ந்தாரா?”

அவர் தன் சொற்படி நடந்தார் என்பதை நான் இங்கு மகிழ்ச்சியோடு கூறிக் கொள்ளுகிறேன். அதே சமயம், ஒரு தெளிவான எடுத்துக்காட்டை வருத்தத்தோடு நான் இங்கு கொடுக்கிறேன்.

என்னுடைய இணை நூலாசிரியரும் என்னுடைய நண்பருமான ஜான்சன் 2017 ம் ஆண்டு ஜூலை மாதத்தில் கணையப் புற்றுநோயால் காலமானார். அந்த வகையான புற்றுநோய் ஒருவருக்கு இருப்பது அவருக்குத் தெரிய வரும்போது, அது வழக்கமாக மோசமான செய்தியாகத்தான் இருக்கும். ஏனெனில், அந்நோயால் பாதிக்கப்பட்டவர்களில் வெகுசிலரே நீண்டகாலம் உயிர் வாழுகின்றனர். ஸ்பென்சருக்குத் தன் நோய் பற்றித் தெரிய வந்தபோது, தன் எஞ்சிய வாழ்க்கையை எவ்வாறு அணுகுவது என்பதைப் பற்றி அவர் யோசித்தார். பயத்தின் அடிப்படையில் அமைந்த ஒரு நம்பிக்கை அமைப்புமுறையைத் தான் தேர்ந்தெடுக்கலாம் அல்லது அன்பின் அடிப்படையில் அமைந்த ஒரு நம்பிக்கை அமைப்புமுறையைத் தான் தேர்ந்தெடுக்கலாம் என்று அவர் தீர்மானித்தார். தான் பயத்தைத் தேர்ந்தெடுத்தால், தன் கவனம் முழுவதும் தன்மீது மட்டுமே இருக்கும், ஆனால் தான் அன்பைத் தேர்ந்தெடுத்தால், தன் கவனம் முழுவதும் மற்றவர்கள்மீது இருக்கும் என்பதை அவர் அறிந்திருந்தார்.

அன்பை அடிப்படையாகக் கொண்டு வாழுவதை அவர் தேர்ந்தெடுத்தபோது நான் பெருமகிழ்ச்சி அடைந்தேன். அவர் தன்னுடைய நெருங்கிய குடும்ப உறுப்பினர்களையும் நண்பர்களையும் மட்டுமல்லாமல், பல்வேறு காரணங்களால் பல ஆண்டுகளாகத் தான்

தொடர்பு கொள்ளாமல் இருந்திருந்த அல்லது பேசாமல் இருந்திருந்த நபர்களையும் தொடர்பு கொண்டார்.

ஸ்பென்சரை நான் பார்க்கச் சென்ற நேரங்களில் நான் சந்தித்தப் பலர், ஸ்பென்சர் தன்னுடைய உடல்நிலையின்மீது கவனம் செலுத்துவதற்கு பதிலாகத் தங்கள்மீது அக்கறை காட்டியது குறித்துப் பெரிதும் வியந்து பேசினர்.

அவரை நான் கடைசி முறையாகச் சந்தித்தபோது, மார்கரெட் மெக்பிரைடும் எங்களுடன் சேர்ந்து கொண்டார். 'ஒரு நிமிட மேலாளர்' நூலுக்கு அவர்தான் எங்களுடைய பதிப்பகத் தொடர்பாளராக இருந்திருந்தார். எங்களுடைய புத்தகங்களைப் பதிப்பித்த வில்லியம் மாரோ பதிப்பு நிறுவனத்தின் முன்னாள் தலைவரான லேரி ஹியூஸை நாங்கள் தொடர்பு கொண்டு, அவர் எங்கள் வாழ்வில் வகித்தப் பங்கிற்காக நாங்கள் எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்தோம். அது ஓர் இனிமையான, மறக்கப்பட முடியாத உரையாடலாக அமைந்தது. நான் ஸ்பென்சரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டபோது, அவரைக் கட்டித் தழுவி, அவரைக் குறித்தும் அவர் தேர்ந்தெடுத்திருந்த நேர்மறையான நம்பிக்கைகள் குறித்தும் நான் மிகவும் பெருமிதம் கொண்டிருந்ததாக அவரிடம் கூறினேன்.

ஸ்பென்சரின் தேர்ந்தெடுப்பு அவர் அன்பு வெள்ளத்தில் நீந்தியபடி இவ்வுலகைவிட்டுப் பிரிந்து செல்ல வழிவகுத்தது குறித்து மனம் நெகிழ்ந்த அவருடைய மகன்களான எமர்சனும் ஆஸ்டினும் கிறிஸ்டியனும், அவருடைய நண்பரான நானும், இப்புத்தகம் பிரசுரிக்கப்படுவதற்கு எங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டோம். ஏனெனில், இப்புத்தகம் ஸ்பென்சருக்கு மிக முக்கியமானதாக இருந்தது. இப்போதுகூட, ஸ்பென்சரிடமிருந்து ஒரு பெரிய 'ஒரு நிமிடப் பாராட்டு' வந்து கொண்டிருப்பதை எங்களால் உணர முடிகிறது.

இச்சிறிய கதையை நான் படித்து ரசித்து மகிழ்ந்துள்ள அளவுக்கு நீங்களும் படித்து ரசித்திருந்தால், இப்புத்தகத்தை மற்றவர்களோடு பகிர்ந்து கொண்டு ஸ்பென்சரின் தாக்கம் தொடர்ந்து நீடிக்க நீங்கள் உதவலாம். நான் அதை நிச்சயமாகச் செய்யப் போகிறேன்!

**--- கென் பிளான்சார்டு**

**சான்டியாகோ , ஜூன் 2018**

## நன்றியுரை

ஸ்பென்சர் ஜான்சன் இவ்வுலகிற்கு ஒரு தனித்துவமான பங்களிப்பை விட்டுச் சென்றுள்ளார். அதிகத் தாக்கம் ஏற்படுத்திய நூலாசிரியர்களில் ஒருவரான அவர், பிரபலத்துவத்தை ஒதுக்கித் தள்ளினார். மாறாக, தன்னுடைய எளிய கதைகள் தம்மைத் தாமே விளம்பரப்படுத்திக் கொள்ளட்டும் என்று அவர் விட்டுவிட்டார். ‘புதிர்ப்பாதையில் இருந்து தப்பித்து வெளியேறுதல்’ என்ற இந்நூலை அவர் இவ்வுலகிற்குத் தன்னுடைய இறுதிப் பங்களிப்பாக விட்டுச் சென்றுள்ளார். அதை உங்களுக்கு வழங்குவதை நாங்கள் எங்களுக்குக் கிடைத்த கௌரவமாகக் கருதுகிறோம். இந்நூல் பிரசுரமாவதற்கு உதவிய அனைவருக்கும் நாங்கள் நன்றி கூற விரும்புகிறோம். குறிப்பாக:

ஸ்பென்சரின் மகன்களான எமர்சன், ஆஸ்டின், கிறிஸ்டியன் ஆகியோருக்கு எங்களுடைய நன்றி. ஸ்பென்சரின் வாழ்வில் அவர்கள் முக்கியப் பங்காற்றினர். இப்புத்தகத்தின் உருவாக்கத்தில் அவர்கள் அவருக்குப் பெரிதும் உதவினர். நாங்களும் ஸ்பென்சரின் கோடிக்கணக்கான வாசகர்களும் அம்மூவரின் இழப்புகளில் பங்கு கொள்ளுகிறோம். அவர்களுடைய தந்தை இவ்வுலகிற்கு விட்டுச் சென்றுள்ள பல பரிசுகளுக்காக நாங்கள் நன்றியுணர்வு கொள்ளுகிறோம்.

ஸ்பென்சரின் நல்ல நண்பரும் ‘ஒரு நிமிட மேலாளர்’ நூலின் இணையாசிரியருமான கென் பிளான்சார்டுக்கு எங்கள் நன்றி. ஸ்பென்சர் இக்கதையை எழுத்துபூர்வமாகப் படைக்க வேண்டும் என்று ஸ்பென்சரிடம் வலியுறுத்தியது அவர்தான். இப்புத்தகம் வெளிவந்தவுடன் அதை உற்சாகமாகப் பிரபலப்படுத்துவதில் முன்னணி வகிப்பதும் கென்தான்.

நீண்டகாலக் கூடாளியான ஹைரம் ஸ்மித்துக்கு எங்கள் நன்றி, அவருடைய பொன்னான பங்களிப்புகள் இப்புத்தகத்தின் உருவாக்கத்தைச் சாத்தியப்படுத்தின.

இப்புத்தகம் மிகச் சிறப்பான ஒன்றாக உருவெடுப்பதற்காகத் துவக்கத்தில் இதைப் படித்துத் திருத்தங்களைப் பரிந்துரைத்த வாசகர்களுக்கு எங்கள் நன்றி.

வில்லியம்ஸ் & கானல்லி எல்எல்பி நிறுவனத்தைச் சேர்ந்த ராபர்ட் பார்னெட்; ஸ்பென்சர் ஜான்சன் அறக்கட்டளையைச் சேர்ந்த கேத்ரின்

நியூன்ஹேம்;

ஏஞ்சலா ரினால்டி இலக்கிய அமைப்பின் தலைவரான ஏஞ்சலா ரினால்டி; ஸ்பென்சரின் செயலாளரான நான்சி கேஸி - உங்கள் அனைவருடைய ஆதரவுக்காகவும் உதவிக்காகவும் மிக்க நன்றி.

புட்னாம் மற்றும் போர்ட்ஃபோலியோ பதிப்பகங்களைச் சேர்ந்த டாம் டஸ்ஸல், தாரா கில்பிரைடு, ஆஷ்லி மெக்லே, மேடிலின் மான்ட்காமெரி, கிறிஸ் செர்ஜியோ, மெர்ரி சன், வில் வைசர், மற்றும் பிறருக்கு - உங்களுடைய பங்களிப்புகளுக்கும் அர்ப்பணிப்பிற்கும் மிக்க நன்றி.

இந்நூலின் கையெழுத்துப் பிரதியைத் தயாரிப்பதற்கு உதவிய ஜான் டேவிட் மான்னுக்கு எங்கள் நன்றி. பதிப்பகத் தொடர்பாளரான மார்கரெட் மெக்பிரைடுக்கு எங்கள் நன்றி.

கோடிக்கணக்கான வாசகர்கள் மற்றும் ரசிகர்களுக்கும், ' என் சீஸை நகர்த்தியது யார்?' என்ற நூலைப் பிரபலப்படுத்தியவர்களுக்கும் எங்கள் நன்றி.

இறுதியாக, ஸ்பென்சருக்கு எங்கள் நன்றி. ஆழமான உண்மைகளை எளிமையான கதைகளில் வழங்குவதில் கைதேர்ந்தவராகத் திகழ்ந்தவர் அவர். அவர் ஒரு மருத்துவராகவும் குழந்தைகளுக்கான நூல்களை எழுதிய ஒரு நூலாசிரியராகவும் திகழ்ந்தது ஒரு தற்செயலான நிகழ்வு அல்ல. புத்தகங்கள் மூலமாக வெறுமனே அறிவை போதிப்பதை விடுத்து, மக்கள் தங்களுடைய வாழ்க்கையை மேம்படுத்த உதவக்கூடிய, நடைமுறையில் செயல்படுத்தத்தக்க உத்திகளையும் வழிமுறைகளையும் அவர் கொடுத்தார். அவ்வாறு செய்ததன் மூலம், இவ்வுலகம் அதிக ஆரோக்கியமான, அதிக மகிழ்ச்சியான, அதிக நிறைவளிக்கும் ஓர் இடமாக ஆக அவர் உதவியுள்ளார்.

**- இவான் ஹெல்டு , ஜி.பி. புட்னாம்ஸ் சன்ஸ் பதிப்பகம்**

**- ஏட்ரியன் ஜாக்கெம் , போர்ட்ஃபோலியோ பதிப்பகம்**

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

## நாகலட்சுமி சண்முகம்

நாகலட்சுமி ஒரு மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளர். அமெரிக்காவின் தலைசிறந்த பேச்சாளர்களில் ஒருவரும், ' சிக்கன் சூப் ஃபார் த சோல்' புத்தக வரிசையை உருவாக்கியவருமான ஜாக் கேன்ஃபீல்டின் 'வெற்றிக் கொள்கைகள்' பயிலரங்கை நடத்துவதற்கு அவரிடம் நேரடியாகப் பயிற்சி பெற்றவர் இவர்.

இவர் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரும்கூட. கடந்த ஏழு ஆண்டுகளில் எழுபதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்துள்ள அங்கீகாரங்களில் 2014 ல் திருப்பூர் தமிழ்ச் சங்கம் அளித்த 'தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கான சிறப்பு விருதும்,' இவர் மொழிபெயர்த்த 'இறுதிச் சொற்பொழிவு' நூலுக்கு 2014 ல் வழங்கப்பட்ட 'நல்லி திசை எட்டும் மொழியாக்க விருதும்' அடங்கும். 2017 மே மாதம் தமிழக அரசு சிறந்த மொழிபெயர்ப்பாளருக்கான விருதை நாகலட்சுமிக்கு வழங்கி கௌரவித்துள்ளது.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டி.கே.எஸ். சகோதரர்களில் ஒருவரான திரு. முத்துசாமி அவர்களின் பேத்திகளில் ஒருவர் இவர். இவர் தற்போது தன் கணவருடனும் தன் குழந்தைகள் இருவருடனும் மும்பையில் வசித்து வருகிறார்.

தம்பதியருக்கு இடையேயான உறவுகளை மேம்படுத்துவதற்கு உதவும் இவரது முதல் சுயபடைப்பான 'மாயாஜாலமான மணவாழ்க்கை & மறந்து போன ரகசியங்கள்' என்ற நூல் சமீபத்தில் வெளியாகிப் பெரும் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது.

# நூலாசிரியர் குறிப்பு

## ஸ்பென்சர் ஜான்சன் ( 1938-2017)

ஸ்பென்சர் ஜான்சன், சர்வதேச அளவில் பெரிதும் மதிக்கப்படுகின்ற சிந்தனையாளர் மற்றும் நூலாசிரியர். உலகெங்கும் விற்பனையில் சாதனைகளைக் குவித்துக் கொண்டிருக்கும் அவரது பத்துப் புத்தகங்களில், ‘ என் சீஸை நகர்த்தியது யார்?’ நூலும் ஒன்று.

நியூயார்க் டைம்ஸ் விற்பனைப் பட்டியலில் முதலாம் இடத்தை வகித்த ‘ஒரு நிமிட மேலாளர்’ என்ற புத்தகத்தை, பிரபல நிர்வாக ஆலோசனையாளரான கென் பிளான்சார்டுடன் இணைந்து அவர் எழுதினார். அப்புத்தகம் இன்றும் வியாபாரம் தொடர்பான புத்தக விற்பனைப் பட்டியலில் இடம்பெற்று வருகின்றது. அதோடு, உலகிலேயே மிகவும் பிரபலமான நிர்வாக வழிமுறையாக அது விளங்கி வருகிறது.

ஸ்பென்சர் ஜான்சன் தென் கலிபோர்னியா பல்கலைக்கழகத்திலிருந்து உளவியலில் பி.ஏ. பட்டம் பெற்றார், ‘ ராயல் காலேஜ் ஆஃப் சர்ஜன்ஸ்’ கல்லூரியிலிருந்து எம்.டி. பட்டம் பெற்றார். பின்னர் ஹார்வர்டு மருத்துவக் கல்லூரி மற்றும் மேயோ மருத்துவ மையத்தில் அவர் மருத்துவப் பயிற்சி பெற்றார். சமீபத்தில் ஹார்வர்டு பிசினஸ் ஸ்கூலில் ‘லீடர்ஷிப் ஃபெல்லோ’வாக அவர் பணி புரிந்துள்ளார்.

அசோசியேட்டட் பிரெஸ், பிபிசி, சிஎன்என், ஃபார்சூன் பத்திரிகை, நியூயார்க் டைம்ஸ், டுடே ஷோ, டைம் பத்திரிகை, யுஎஸ்ஏ டுடே, யுனைட்டட் பிரெஸ் போன்ற ஊடகங்களில் அவரது படைப்புகள் அடிக்கடி இடம்பெற்றுள்ளன.

42 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள அவரது புத்தகங்களை உலகெங்கிலும் நான்கு கோடி மக்கள் படித்துள்ளனர். அவர் 2017 ம் ஆண்டில் காலமானார்.